# தேவி கருமாரியம்மன் வரலாறு



மணிமேகலைப் பிரசுரம்



தேவிதாசர்

# தேவி கருமாரியம்மன் வரலாறு

ஆசிரியர்

**தேவிதாசர்**

பதிப்பாசிரியர்

**லேனா தமிழ்வாணன்** எம்.ஏ.,






**மணிமேகலைப் பிரசுரம்**
தபால் பெட்டி எண் : 1447
4, தணிகாசலம் சாலை, தியாகராயநகர்,
சென்னை – 600 017.
தொலைபேசி : 4342926
தொலைநகல் : 044–4346082

# நூல் விபரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | - | தேவி கருமாரியம்மன் வரலாறு |
| ஆசிரியர் | - | தேவிதாசர் |
| மொழி | - | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | - | 1997 |
| பதிப்பு விவரம் | - | முதல் பதிப்பு |
| உரிமை | - | மணிமேகலைப் பிரசுரம் |
| தாளின் தன்மை | - | 11.2 கி.கி |
| நூலின் அளவு | - | கிரெளன் சைஸ் 12½ x 18½ செ.மீ. |
| அச்சு எழுத்து அளவு | - | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | - | 152 பக்கங்கள் |
| **நூலின் விலை** | - | **ரூ. 29.00** |
| நூல் அட்டை வண்ணப்படம் | - | தணிகை முருகன் |
| அச்சிட்டோர் | - | ஜோதி ஆப்ஸெட், சென்னை - 14. |
| கணிணி அச்சு | - | சித்ரா பிரிண்டோகிராபி, சென்னை - 14. |
| நூல் கட்டுமானம் | - | தையல் |
| வெளியிட்டோர் | - | மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 17. |

92/3

# பொருளடக்கம்


விக்கினமில்லாத தேவி உபாசனை ........ 5

கருமாரியின் தோற்றம் ........ 11

அன்னையின் தோற்றம் ........ 14

திருவேற்காட்டின் தலப் பெருமை ........ 18

மாரி - மகமாயி - கருமாரி ........ 34

ஏகசக்தி ஆதிபராசக்திதானே! ........ 41

மாயையும் அவளே! ........ 43

சிவசக்தியை உணர்ந்த பிருங்கி ........ 48

ஆங்காரியும் அவளே ........ 66

சாந்த சொரூபிணி ........ 79

திருவேற்காட்டு சக்திபீட மகிமை ........ 83

ஆதி கருமாரியம்மன் ........ 99

மாரியம்மன் வரலாறு ........ 108

எங்கெங்கும் சக்தியடா! ........ 126

# விற்பனையாகும் இதர நூல்கள்

## புராணங்கள் Mythology

| | |
|---|---|
| சிவ புராணம் | 28.00 |
| கந்த புராணம் | 65.00 |
| விஷ்ணு புராணம் | 39.00 |
| அனுமார் புராணம் | 39.00 |
| பிள்ளையார் புராணம் | 49.00 |
| விநாயகரும் விநோதச் செய்திகளும் | 17.00 |
| நாரதர் புராணம் | 20.00 |
| சூரிய புராணம் | 23.00 |
| திருவிளையாடற் புராணம் | 48.00 |
| மார்க்கண்டேயர் அருளிய புராணம் | 33.00 |
| தேவி பாகவதம் | 18.00 |
| ஐயப்பன் புராணமும் பாடல்களும் | 22.00 |
| பரந்தாமனின் பத்து அவதாரங்கள் | 34.00 |
| மகாபாரதம் பாகம் 1 | 61.50 |
| பாகம் 2 | 42.00 |
| மகாபாரத உபதேசக் கதைகள் | 22.00 |
| மகாபாரதச் சிறுகதைகள் | 16.00 |
| புராணச் சிறுகதைகள் | 16.00 |
| திருப்பதி வெங்கடாசலபதியின் வரலாறும் வழிபாட்டு முறைகளும் | 24.00 |
| காளஹஸ்தி தலபுராணமும் பெருமைகளும் | 33.00 |

## பக்தி

| | |
|---|---|
| தெய்வ நம்பிக்கையும் தெளிவுமிக்க வாழ்க்கையும் | 18.00 |
| கோயில்களும் தெய்வீக முயற்சிகளும் | 13.50 |
| கீதை காட்டும் பாதை | 42.00 |
| சந்தியாவந்தனம் செய்வது எப்படி? | 13.00 |
| அஷ்டலட்சுமிகள் வரலாறும் வழிபாடும் | 17.00 |
| இந்துப் பண்டிகைகளின் வரலாறும் வழிபாட்டு முறைகளும் | 9.50 |
| சர்வதோஷ நிவர்த்தி தரும் சர்வேஸ்வரன், சிவன், சங்கரன் வழிபாடு | 11.00 |
| எந்தக் காரியம் வெற்றி பெற எந்தக் கடவுளை எப்படி வணங்க வேண்டும்? | 31.00 |
| ஆன்மீக ஐயங்களும் விடைகளும் | 18.00 |

92/3

உ

விக்கினமில்லாத

# தேவி உபாசனை

கருமாரி என்றொரு சக்தி இருக்கின்றாள்
ஏற்காட்டு எல்லையிலே - அவள்
உருமாறி கருநாகமாக உறைகின்றாள்
அன்பூட்டும் நெஞ்சினிலே - பால்
அமுதூட்டும் வஞ்சி யவளே (கரு)

கற்பகம் என்றொரு பொற்கொடி சிறக்கின்றாள்
மயிலையின் மத்தியிலே - அவள்
மயிலாகி மலர்களைத்தூவி அர்ச்சிக்கின்றாள்
மன்னனைக் காண்பதற்கே - அழகு
புன்னைவனம் தனிலே (–)

ஆதியில் காமாட்சி அன்னை சிரிக்கின்றாள்
மாங்காட்டு எல்லையிலே - அவள்
ஊசிமுனையிலே விரலூன்றி நிற்கின்றாள்
ஐவகை நெருப்பினிலே - மைவிழி
சக்தி அவளே... (கரு) - சிவசக்தி

**கருமாரி பெயர்க் காரணம்**

கலப்படமில்லாத தங்கத்தில் ஆபரணங்கள் செய்ய முடியாது. அதில் தாமிரம் என்கின்ற செம்பை அளவாகக் கலந்தால்தான் வண்ணமும், ஒளியும் பெறுகிறது.

அதுபோல மாயை கொஞ்சம் கலந்திருந்தால்தான் மனிதன் உலகில் வாழ முடியும். உடல் இருக்கும்வரை சிறிதளவு மாயையும் உடனிருந்து மயக்கத்தைக் கொடுக்கிறது.

அது இல்லையேல் மனிதன் சுத்தத் தங்கமாகவே இருப்பான்.

அந்த மனிதன் உய்ய வழி?

தெய்வ வழிபாடு.

செய்கிறானா என்றால் இல்லையே, ஏன்?

அவன்தான் மாயையில் மூழ்கிக் கிடக்கிறானே!

மாயை என்ற வார்த்தை வரும்போது மாயையாகத் தோன்றிய அன்னையின் நினைவுதான் வருகிறது.

நான்முகனுக்குச் சக்தி கலைமகள்

சிவபிரானுக்குச் சக்தி உமையவள்

திருமாலுக்குச் சக்தி லட்சுமி.

இந்த மூன்று சக்திகள் ஒரே உருவத்தை ராஜ ராஜேசுவரி என்பர்.

சக்தியே நம்மை இயங்க வைக்கிறது. ஒரு பொருளை இன்னதென்று அறியுமாறு நமக்கு உதவுவது ஞானசக்தி. இது நமக்கு வேண்டும் என்ற ஆசையை உண்பிப்பது இச்சா சக்தி. அதை அடைய முயற்சி செய்யுமாறு நம்மை ஊக்குவிக்கிறது கிரியா சக்தி.

மனிதரை இவ்வாறு செய்யத் தூண்டுவது தவிர உலகைப் பரிப்பது கிரியா சக்தி. உலகைக் காப்பது ஞான சக்தி, தன் விருப்பம் போல் சம்ஹரிப்பது இச்சா சக்தி, நம் பாவ புண்ணியங்களை மறைக்கும் திரோதான சக்தியே ஆதிசக்தி. யாவற்றுக்கும் மேலாக அருள்புரிவது பராசக்தி. இது ஆன்றோர் கண்ட உண்மை.

இப்படிப்பட்ட சிறப்புக்கள் வாய்ந்த சக்தியை, அன்னையை, முன் செய்த புண்ணியமில்லாதவர் வணங்க இயலாது என்கிறார் அருட் செல்வர் ஆதிசங்கரர்.

**படைப்பின் விசித்திரம்!**

ஆதிபராசக்தியின் அருளால் பஞ்சபூதங்கள் உண்டா யின. மண், நீர், வளி, வான், தீ என்பன பஞ்சபூதங்கள்.

நான்முகன் சிருஷ்டிக்கத் தொடங்கினார். உருவங்களை உண்டாக்க, சப்தத்தைக் கேட்கக் கூடிய ஆற்றலை ஆகாயம் தந்தது. தீண்டினால் ஏற்படும் ஸ்பரிச உணர்ச்சியைத் தோலுக்கு வாயு கொடுத்தது. காண்பதற்கான சக்தியை கண்களுக்கு அக்கினி அளித்தது. நாவுக்கு ருசியை அறியும் சக்தியைத் தண்ணீர் தந்தது. வாசனை அறியும் சக்தியைப் பூமி அளித்தது.

இப்படி உலகையும் உயிர்களையும் படைத்தார் படைப்புக்கர்த்தா. திருமால் ஆதிசேஷனை வைத்து உலகைத் தாங்கிக் காக்கும் பொறுப்பை ஏற்றார். சிவபெருமான் அன்னையின் பேரருள் துணை கொண்டு உலகத்தை அழித்தார்.

**எங்கும் சக்தி வடிவமடா!**

இப்படி முத்தொழில்கள் நடைபெற்றன. கன்னி வடிவத்தில் நவதுர்க்கைகளின் பெயர்கள் கௌமாரி, திரிபுரா, கல்யாணி, ரோஹிணி, காமினி, சண்டிகா, சாங்கரீ, துர்க்கா, சுபத்ரா.

இவற்றில் கருமாரியின் பெயர் இல்லை. வனதுர்க்கா, சூலினி துர்க்கா, சாந்தி துர்க்கா, ஜாதவேத துர்க்கா, சபரி துர்க்கா, ஜவல துர்க்கா, லவண துர்க்கா, தீப துர்க்கா, அசுர துர்க்கா என்ற ஒன்பது துர்க்கைகளிலும் அன்னை கருமாரி பெயர் இல்லை.

"நாரதா! எல்லாவற்றையும் அழிக்கும் சர்வ சங்கார காலத்தில் நான் ஸ்திரீயுமன்று, புருஷனுமன்று, அலியு மன்று. மறுபடியும் உற்பத்தியாகும் காலத்தில், புத்தி, சம்பத்து, தைரியம், புகழ், நினைவு, சிரத்தை, தீர்க்க ஆலோசனை, தயை, வெட்கம், பசி, தாகம், பொறுமை, தேஜஸ், சாந்தி தாகம், துக்கம், சோம்பல், நரை, திரை, மூப்பு, ஞானம், அஞ்ஞானம், ஆசை, அபேக்ஷை, பலம், பலவீனம், இரத்தம், மஜ்ஜை, மேனித் தோல், கண்கள், வாக்கு, பொய், மெய் என்றெல்லாம் புத்தியில் கற்பிக்கப்பட்டுப் பேதரூபமாக இருக்கின்ற இவை யெல்லாம் நானாகவே இருந்து அதனதன் செயலையும், பயனையும் செய்பவளாக இருக்கிறேன்.

என்னை விட்டுப் பிரிந்த எந்த வஸ்துவும் இயங்காது. ஆகையால் எல்லாப் பொருளும் நானே. எல்லாமே நானாயிருக்கும் போது, அவ்வப்பொருளின் வண்ணமும் நான் ஏன் ஆகமாட்டேன்?

**எல்லாமும் அவளே**

புனர் உற்பவ காலத்தில், கௌரி, பிராம்மி, ரௌத்ரி, வராஹி, வைஷ்ணவி, சிவா, வாருணி, கௌபேரி, நாரசிம்ஹி, இந்திராணி என்றும் பல்வேறு பெயர்களுடன் நானே அந்த சக்தி சொரூபமாய் இருந்து அந்தந்த சக்திக் குரிய ஆற்றலுடன் செயலாற்றி வருகிறேன்.

தண்ணீரில் குளிர்ச்சி நான், நெருப்பில் உஷ்ணம் நான், சூரியனில் ஒளி நான், சந்திரனில் குளுமை நான்" என்று

பராசக்தி கூறுவதாக 'தேவி பாகவத்'த்தில் முதற்பாகம் கூறுகிறது. மேற்கண்ட ஒன்பது சக்திகளின் பெயரிலும் கருமாரி பெயர் காணவில்லை.

அப்படியானால் கருமாரி என்பவள் யார்? அவளுக்கு இப்பெயர் எப்படி வந்தது?

கரு + மாரி = கருமாரி

'உருமாரி கருநாகமாக உறைகிறாள்' என்று கண்டோம். கருமை நிறம் கொண்டவள் பராசக்தி. ஆகவே கரு என்றும் கூறுவர். அவள் மட்டுமா க்ருமை வண்ணம் கொண்டவள்? திருமால் கரியவர். ராமன், பரதன், பாரதம் இயற்றிய வியாசர், கிருஷ்ணன், திரெளபதை கருநிறமுடையவர்களே!

**தானாகி நின்றவள்**

அம்பாளின் நிறம் பச்சை. அவள் காளியாக, துர்க்கையாக, கருமாரியாக மாறும் போது கரிய நிறமுடையவளாகின்றாள்.

மாரி என்றால் மாரியம்மனைக் குறிக்கும். மழையைக் குறிக்கும். மழை நல்லவர் தீயவர் எனப் பேதமின்றிப் பொழியும். அது போல் மழை போலக் கருணையைப் பொழிபவள் அன்னை. ஆகவே மாரி என்ற சொல்லும் பொருந்தும்.

ஆவணி மாதம் மழைக்காலமல்லவா? அந்த மாதத்தில் பிறந்ததால் மாரி என்பர். மாயையின் அவதார காரணத்தால் மகாமாயி எனப்பட்டாள். மாயி என்ற சொல் மாரியாகியிருக்கலாம்.

மாரி என்ற சொல் 'தேவி மகாத்மிய'த்தில் அம்பிகை பற்றிக் கையாளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆகவே கருமை நிறம் கொண்டு கருணையை மழை போலப்

பொழியும் அன்னையே கருமாரி என அழைக்கப் படுகிறாள்.

கருமாரியில் 'க' என்ற எழுத்து கலைமகளையும் 'ரு' என்ற எழுத்து ருத்ரனையும் 'மா' என்ற எழுத்து லக்ஷ்மியையும் 'ரி' என்ற எழுத்து ரீங்காரமாக நாதத்தில் உறைபவள் என்றும் கூறலாம்.

மாரியம்மன் என்றாலே, பாம்பாகிப் புற்றிலே உறையும் தெய்வம் என்பதே பாமர மக்கள் முதல் படித்தவர் வரை கேட்ட, கண்ட உண்மை.

"உருமாரிக் கருநாகமாக உறைகிறாள்
ஏற்காட்டு எல்லையிலே"

பெயர்க்காரணமே உள்ளங்கை நெல்லிக்கனியாய்த் தெரிகிறது. கருநாகமாகக் கருமாரி புகழ் பெற்றுவிட்டாள்.

அந்தக் கருமாரி எங்கே இருக்கின்றாள்?

திருவேற்காடு என்ற இடத்திலே கொலு வீற்றிருக் கிறாள். திக்கெட்டும் புகழ் பரப்பிப் பக்தி மணம் கமழ அன்பர்களை அரவணைத்துக் கருணை பாலிக்கின்றாள் அன்னை கருமாரி. ஆம் 'கலியுகக் கண்கண்ட தெய்வம்' என்றும் சிறப்புப் பெற்றுவிட்டாளே.



# கருமாரியின் தோற்றம்

ஆதிபராசக்தியின் தோற்றமே கருமாரி. பூலோகத்தில் இருந்து சிவபெருமான் கயிலாயத்திற்குப் போகும் போது, தன் மேனியில் பூத்த திருநீற்றை வழித்து வேல்கண்ணி என்கிற பாலாம்பிகையிடம் கொடுத்து 'இதை வைத்துப் பூலோகத்தில் ஐந்தொழில் செய்க' என்று பணித்து மறைந்தார்.

தேவி வேல்கண்ணி, பூலோகத்தில் தானிருந்த இடத்திற்கு ஈசான்ய மூலையில் அமர்ந்து இச்சா மாத்திரத்தில் ஏழு உருவானாள். அவர்கள், அந்தரக் கண்ணி, ஆகாயக் கண்ணி, பிராஹ்மணிக் கண்ணி, காமக் கண்ணி, மீன் கண்ணி, விசாலக் கண்ணி, வேல் கண்ணி என்ற பெயரில் எழுந்தாள்.

**ஏழில் இயங்கும் சிறப்புகள்**

ஏழு என்றதும் நமக்கு என்னவெல்லாமோ நினைவுக்கு வருகின்றன. சப்தரிஷிகள், மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், கிரது, வசிஷ்டர் என்பர். இதுவன்றி இதிலும் கருத்துவேறுபாடு உண்டு. கச்யபர், அத்ரி, பரத்வாஜர், விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்நி, வசிஷ்டர் என எழுவரே சப்த ரிஷிகள் என்பாரும் உண்டு.

நியாய சாஸ்திரத்தின் பதார்த்தங்கள் ஏழு. திரவியம், குணம், கர்மம், சாமானியம், விசேஷம், ஸமவாயம், அபாவம் என்பவை.

சப்தஸ்வரங்கள் ஏழு. ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற வகைகளின் முதல் எழுத்தை வைத்தே ஸ, ரி, க, ம, ப, த, நி என வழங்குகின்றனர்.

**சப்த திருத்தலங்கள்**

1. திருவாரூரில் வீதி விடங்கர். இவர் சுவாஸ ரூபமான அஜபா நடனம் ஆடியவர் - சிவசக்தி.
2. திருநள்ளாறிலே நாக விடங்கர். கிடுகிடென்று உன்மத்த (பைத்தியம்) நடனம் ஆடியவர் - சிவசக்தி.
3. திருநாகைக்காரோணத்தில் (இப்போதைய நாகப் பட்டினம்) சுந்தரவிடங்கர் என அழைக்கப்படுகிறார். கடலலையைப் போல ஆடினதால் பாராவாரதரங்க நடனம் என்பர்.
4. திருக்காறாயில் ஆதிவிடங்கர் எனப்பட்டார். கோழி தத்தித் தத்தி நடப்பதுபோல் அவர் ஆடினார். இதைக் குக்குட நடனம் என்பர்.
5. திருக்கோஸலியில் அவனி விடங்கர். வண்டு சுற்றுவது போல் பிருங்க நடனம் ஆடுவார்.
6. திருவாய்மூரில் நீல விடங்கர் எனப்பட்டார். கமல நடனம் ஆடுபவர்.
7. வேதாரண்யம் என்கிற திருமறைக்காட்டில், புவனிவிடங்கர் என அழைக்கப்படுபவர். அன்னம் சஞ்சரிப்பது போல ஹம்ச பாத நடனம் ஆடுபவர்.

இப்படிச் சிவசக்தி நடனம் ஆடிய ஏழு சிவ ஸ்தலங்கள்.

**கருமாரியின் சிறப்பு**

ஏழிற்கு அவ்வளவு மகத்துவம் உண்டு.

இச்சா சக்தியால் ஏழு உருவாக மாறியவர்களுள் அந்தரக் கண்ணி, ஆகாயக் கண்ணி, பிராஹ்மணக் கண்ணி என்ற மூவர், காடு, மலை, நதியின் அருகே எழுந்தருளினார்கள்.

மற்றவரில்,

காமக்கண்ணி, காஞ்சியிலே காமாக்ஷி ஆனாள். மீன் கண்ணி, மதுரையிலே மீனாட்சியாக அமர்ந்தாள். விசாலக் கண்ணி காசியிலே விசாலாட்சியாக அமர்ந்தாள்.

ஏழாவதாக நின்ற கருமாரி திருவேற்காட்டில் அமர்ந்தாள்.

உருவை மறைப்பவள் உருமாறிக் கருமாரியாகிறாள்.

திருவேற்காட்டில், கருவறையில் தலைமட்டும் மேலேயிருக்க உடலை மறைத்துவிட்டாளே!

அதுவே இவ்வன்னையின் தலையாய சிறப்பு.

இதைவிடச் சிறப்பு,

ஐந்து தலை நாகம் குடைபோலப் படமெடுத்து இருக்கும் உருவச்சிலை... அப்பா!... இது எந்த சக்தி பீடத்திலும் இல்லாத சிறப்பு.



# அன்னையின் தோற்றம்

**தோற்றத்தின் தத்துவம்**

சிவமும், சக்தியும், நாராயணமும் ஆன மூன்று சக்திகளின் சேர்க்கையால் உருவானவள் இவள்.

சங்கரநாராயணராக ஒரே ஒரு தலத்தில் காட்சி தருகிறார். சங்கரநாராயண ரூபம் என்பர் இதை.

சிவமும் சக்தியும் சேர்ந்த சிவசக்தி ரூபம், அர்த்தநாரீச்வர ரூபம்.

சிவமும், விஷ்ணுவும் சேர்ந்த கலப்பு ஐயப்பன் - சிவசக்திக் கலப்பால் தோன்றியவர் முருகன். சிவம் - சக்தி - விஷ்ணு கலப்பால் தோன்றியவள் கருமாரி.

அழித்தல் தொழிலை ருத்ரன் செய்கிறார்.

காத்தல் தொழிலை விஷ்ணு செய்கிறார்.

இத்தொழில்களுக்கு கருணை வேண்டும். கருணையைப் பொழிபவளே கருமாரி எனும் தேவி.

உலக வாழ்க்கைக்கு நீர் இன்றியமையாதது. அதற்கு மழை ரிஷிமூலம்.

மழையில்லையேல் நீர் சுரக்காது.

நீரின்றி உலகம் அமையாது - அசையாது - இயங்காது

உலகில் வாழும் உயிர்களுக்கு உயிர்நாடி தண்ணீர். அறத்தொடும் பொருளோடும் இன்பங்களோடும் வாழ்க்கை நடத்த மழை அவசியம் தேவை.

மழையாயிருப்பவளும் மாரியே -
மகமாரியே.

சிவசக்தியே மாரி என வழங்கும் பெருந்தேவி. அந்த மாரியைப் பற்றி,

**"நீர் இன்றியமையாது உலகு எனின் யார் யார்க்கும்**
**வான்இன்றி அமையாது ஒழுக்கு"**

என்றார் திருவள்ளுவர்.

மாராசூரனைக் கொன்றவள் மாரி. அம்மாரி இன்றும் காலதேவனிடம் தேவியாக இருக்கிறாள் என்கிறது தொந்நூல்.

இப்படிப்பட்ட மாரி கருமை நிறத்தோடு கூடிக் கருணை பாலிக்கிறாள்.

திருவேற்காட்டில்.

**ஏற்காட்டில் எழிலரசி!**

திருவேற்காடு சென்னையிலிருந்து பூந்தமல்லிக்குப் போகும் நெடுஞ்சாலையிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் தனிமையிலிருக்கும் தலம்.

சென்னையிலிருந்து 12 மைல் வேலப்பன் சாவடி யிலிருந்து 4 பர்லாங்கில் உள்ளது திருவேற்காடு சக்தி பீடம்.

திருவேற்காடு வட வேதாரண்யம் எனப் புகழ்பெற்றது. தொண்டை நாட்டில் சிறந்த சக்திபீடங்களில் திருவேற்காடும் ஒன்று.

சிவசக்தி திருக்கோவிலும் இருக்கிறது. அது ஆதி சிவன் கோயில்

ஐம்பெரும் பூதங்களே ஐந்துதலை நாகமாகக் குடை பிடித்திருக்கின்றன.

ஒரு கையில் சூலம், மற்றொரு கையில் உடுக்கை, ஒரு கையில் வாள், மறுகையில் பொற்கிண்ணம் சகிதமாகக் கொலு வீற்றிருக்கிறாள் தேவி.

முகத்தினில் புன்சிரிப்பு. கருணையின் மேதாவிலாசம்., கவனஈர்ப்புக் காந்தக் கண்கள். இத்தனைக்கும் மேலாக ஒரு கவர்ச்சித் தோற்றம். அவளே,

"விஷ்ணு சகோதரி! வீரலக்ஷ்மி! விஜயலக்ஷ்மி!
மகமாயி! பச்சையம்மா!
பிடாரிநீ! மதாங்கினி! அகிலாண்ட வல்லியே!
அத்தண்ட மாரிமுத்தே
அம்மாநீ பத்ரகாளி! நவகாளி! கருமாரி!
மாரியம்மன் துர்க்கைநீயே!
அபிராமி உமையவள் மீனாட்சி காமாட்சி
விசாலாட்சி காளி நீயே..." (சிவசக்தி)

எல்லாமும் அவளாகி அகிலாண்டேச்வரியாய் அன்னபூர்ணித்தாயாய் வயிறாற ஞானப்பாலும் அமுதும் ஈந்து வாழவைக்கின்றவள் இவளே அன்னை கருமாரி.

கருணை பொழியும் தாய்க்குக் கத்தி ஏன்? சூலம் ஏன்? கேள்வி எழுகிறதே!

பதிலும் கைவசமிருக்கிறது.

**நாதமும் அவளே! வேதமும் அவளே!**

திரிசூலம் திரிபுரசுந்தரியின் அடையாளச் சின்னம். மூன்று தன்மைகளே, மூன்று சக்திகளே ஒரே உருவாய்த்

திரிபுரசுந்தரியாய் இருப்பதால் மூன்று கூர்மையுள்ள சூலம் கையிலே பிடித்திருக்கிறாள்.

அம்பிகை நாத ரூபமானவள். ஒலியிலிருந்துதான் நாதம் ஏற்பட்டது. நாதத்துள்தான் ஆங்காரியும் ஓங்காரியும் களி நடம் புரிகின்றனர்.

உடுக்கை இதற்காகவே இருக்கிறது.

**கத்தி:** அஞ்ஞானம் என்ற கயிற்றை வெட்டுவதற்கு உபயோகப்படுகிறது. அதர்ம வழிகளில் நடப்பவரைத் தண்டிப்பேன் என எச்சரிக்கை விடுவதாகவும் தெரிகிறது.

**பொற்கிண்ணம்:** ஞானப்பால் இருக்கும் கிண்ணம். என்னிடம் பற்றுவைத்துச் சரணாகதி அடைந்துவிட்டால் ஞானப்பாலை வாரி வழங்குவேன் என உத்திரவாதம் கூறுபவளாய் இருக்கிறாள்.

காளி, வராஹி, துர்க்கா, கருமாரி - இவர்களை உபாசித்தால் நிச்சயம் ஞானம் கை வரும். சித்து விளையாடும்.



# திருவேற்காட்டின் தலப் பெருமை

ஆதியில் திருவேற்காட்டில் அம்பிகை புற்று வடிவத்தில் தான் இருந்தாள்.

இவளை அனைவரும் போற்றிப் பணிந்தனர்.

ஒருமுறை ஹிமயவான் மகளுக்கும் (மலைமகள்) சிவபெருமானுக்கும் திருமணம் இமயமலை மன்னன் அரண்மனையில் நடந்தது. அப்போது அளவுக்கு மீறிய ஜனக்கூட்டம் வடக்கே சேர்ந்ததால், வடக்கு அமிழ்ந்தது. தெற்குப்பகுதி தூக்கியிருந்தது.

அப்போது சிவபெருமான் அகஸ்திய மாமுனிவரை அழைத்து,

"அகஸ்தியரே! உடனே தெற்கு நோக்கிச் செல்லுங்கள். தெற்கும் வடக்கும் சமநிலைப்படும்" என்றார்.

தயங்கினார் - அகஸ்தியமாமுனி.

"என்ன தயக்கம்?" சிவசக்தி கேட்டார்.

"ஒன்றுமில்லை இறைவா! தங்கள் திருமணக் கோலத்தைக் கண்ணாறக் காண்பதற்குக் கொடுத்து வைக்கவில்லையே என்பதே வருத்தம்" என்றார் அகஸ்தியர்.

"அன்பனே! வடக்கு அமிழவும் தெற்கு உயரவும் இருக்கின்ற இந்த ஆபத்தான நிலையை இப்போது உடனடி நடவடிக்கையால் நீதான் சமநிலைப்படுத்த முடியும் சிவசக்தி திருமணக் கோலம் காணத்தான் வந்தாய். எனினும் உனக்கு அதைவிட அவசர அவசியமான வேலை இப்போது வந்துவிட்டதே! நான் எனது திருமணக் கோலத்தை உனக்கு ஏழு திருத்தலங்களில் காட்டுகிறேன்.

குறிப்பாகத் திருவேற்காட்டிலேயும் திருமணக் கோலம் காணலாம்.

ஏனெனில் திருவேற்காட்டில் சக்தி பீடம் ஏற்படப் போகிறது. அதற்கு முன், நான் திருமணக் கோலத்தை உன் மனம் மகிழக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி அனுப்பினார்.

**அன்புக்கு ஓர் அகஸ்தியர்**

அகஸ்தியரும் தெற்கு நோக்கி வந்தார். தெற்கும் வடக்கும் சம நிலையாயின. திருமணமும் நல்லவிதமாய் முடிந்தது.

சிவபெருமான் வாக்களித்தபடி வடவேதாரண்யம் என்ற புகழ் கொண்ட திருவேற்காட்டில் திருமணக் கோலத்தைக் காட்டினார்.

வேதபுரீஸ்வரர் - வேற்கண்ணி என்ற பெயரிலே ஆதி கோயிலில் திருமணக் கோலத்தில் அம்மையப்பன் காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

சக்தி பீடமான திருவேற்காடு தெய்வீக ஆகர்ஷண சக்தி கொண்டதாய் அன்பர்கள் மன அழுக்கைப் போக்கித் தூய்மைப்படுத்தும் புனித ஆலயமாகக் காட்சி தருகிறது. கலியுகத்தின் கலி நீக்கிக் கருமாரியாகக் காட்சி தந்து அருள் விளையாட்டு விளையாட ஆரம்பித்திருக்கிறாள்.

"குவலயத்தை ஆளவந்த குங்குமக்காரி
குணமுடனே அருள வந்தாய் ஓம் கருமாரி

குலுங்கிக்குலுங்கிச் சிரிப்பவளே குங்குமக்காரி
அலுங்கி நலுங்கி ஆடவந்தாய் ஓம் கருமாரி
குங்குமத்து ஆற்றினிலே குளிக்கும் மாகாளி
அங்கம்முழுதும் தங்கமானாய் குங்குமக்காரி

ஏற்காட்டில் வீற்றிருக்கும் கருமாரி யானாய்
வேற்படையுடன் வீரம் கண்டும் மகமாயியானாய்
மதுரையிலே நீயிருந்து மீனாட்சி யானாய்
காஞ்சியிலே காட்சி தந்துக் காமாட்சி யானாய்

துலங்கு மணிமண்டபத்தில் துர்க்கை யுமானாய்
பளிங்குமேடை யமர்ந்த வளாய்ப் பகவதி யானாய்
களங்கொண்ட காவல்தெய்வம் காளியுமானாய்
வளங்கொண்ட மயிலையிலே கற்பகமானாய்"

(சிவ சக்தி)

இப்படிப் பல சித்தர்களும், யோகிகளும், மகரிஷிகளும் பராசக்தி வேற்கண்ணியாய்க் கருமாரியாய் காட்சி தருவதைப் போற்றி யிருக்கிறார்கள்.

திருமூலர் மந்திரத்திலும் குண்டலினி நாக வடிவு பெற்ற வரலாறு தெரியவருகிறது. கருமாரியின் அடிப்படை தத்துவங்களைப் பல செய்யுள்களில் காண முடிகிறது.

**உயிர்களின் நலம் குறித்து**

அகஸ்திய மாமுனிவர் திருமணக் கோலம் கண்டு மகிழ்ந்து இந்த ஆலயத்திலே நெடுநாள் இருந்து தவமியற்றிப் பிறகே புறப்பட யோசித்தார்.

புறப்படுமுன் உலக க்ஷேமத்திற்காகவும், அன்னபூரணியாள், வினையறுக்க வந்த வித்தகியாள் அன்னை கருமாரியின் புகழ் பரவவும் ஒரு பூஜை செய்தார்.

ஆற்று மணலால் லிங்கம் பிடித்துச் சொம்பில் கலசம் வைத்து, அதில் அன்னையை ஆவாஹனம் செய்து வைத்து, வேத மந்திரங்கள் சொல்லியும், செந்தமிழ்ப் பாடல்களால் மனம் கசிந்துருகிப் பாடியும் பூஜைகளைச் செய்தார்.

**அன்னையின் அமுத வாக்கு**

அகஸ்தியாரின் பூஜைக்கு அன்னை மகிழ்ந்து நான்கு கரங்களோடும் கருநிற மேனியோடும் கருநீலியாகக் காட்சி தந்தாள்.

"அன்பனே! வேதத்தின் ரூபமான இறைவனின் திருமணக் கோலம் கண்டது போதாமல் உலக உயிர்களின் நலனுக்காகப் பூஜையும் செய்தனையோ? மகிழ்ந்தே இத்தலத்தில் வேற்கண்ணியான நான் கருநாகமாகிப் புற்றிலே உறைவதால் கருமாரி என வழங்கப்படுவேன்.

கலியுகத்தின் குறைகளை, துன்பங்களை, மக்கள் பிணிகளைப் போக்கி சாயுஜ்யம் அடையவைக்கவே நான் உக்ரமான தேவியாகக் காட்சி தருகிறேன். உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்" எனக் கேட்டாள்.

வேல் போன்ற கண்களை உடையவள். வேற்கண்ணித்தாய் இப்போது கருநீலக் கருமை நிறத்தோடு அழகு பளிச்சிட வந்து நின்ற கோலத்தைக் கண்டு மெய்மறந்து ,ஆனந்த வெள்ளத்திலே மூழ்கிய அகஸ்தியர்,

"அன்னையே! அம்பிகே! லலிதா! கௌரி! ரோகிணி! திரிபுரீ! பைரவி! சந்திராவதி! காளி! கருமாரி!

சாமுண்டீச்வரி! காமாட்சி! மீனாட்சி! விசாலாட்சி! பத்ரகாளி! துர்க்கை தேவி!

உக்ரமான ரூபம் எடுத்தாலே கருமை நிறம் தெரிகிறது. சாந்த சொரூபிணியாய் காட்சி தந்தால் பொன்னிற மேனியோடு பூத்துக் குலுங்குவாய் கண்ணைப் பறிக்கும் அழகோடு.

காளியானாலும், கருமாரியானாலும், துர்க்கையானாலும், வேம்புலியானாலும் உக்ரமான தோற்றமே கொண்டவர்கள்.

நான் தரிசனம் பெற நினைத்தது சக்தியின் பீடமாய் இங்கே நீ தனியாட்சி புரிய வேண்டும். இந்த இடம் தவ வலிமை பெற்ற மகரிஷிகள், சித்தர்கள் தவம் புரிந்து ஐக்யமான பூமியும் கூட. ஆகவே அன்னையே! கருமாரியாக நீ கோலம் கொண்டு எனக்கு அருளுவது போல் உக்ரத்தைத் தணித்து அருள் கனிந்த முகத்தோடு,

"கோபக்கனல் தெறித்த முகம் குளிர் பார்வை
பார்த்துவிட
தாபக்கனல் தணிந்திடவே தாய்மைப் போர்வை
போர்த்துவிட"

என்பது போல் சாந்தமாய் அருள் புரிவாய் தாயே!" என்று வேண்டி நின்றார்.

**ஆதிசக்தி நாயகி நீயே!**

"இந்த ஜகத்து மாந்தர்களை உய்விக்கவே வந்த அன்னை ஆதிபராசக்தியின் அம்சமல்லவா நீ?! ஐந்தொழில்களையும் புரியும் வேற்கண்ணியல்லவா நீ! இறைவன் உனக்களித்த மேனி சாம்பல் தானே இங்கே மக்களுக்கும் பிணி போக்கும் பிரசாதம்! எனக்கும் அருள் புரிவாய் தாயே!" என்றார் அகஸ்தியர்.

"அகிலத்து உயிர்களை ஆட்டிப்படைப்பவளே
ஆறுதல் கூறாமல் அங்குமிங்கும் அலைபவளே
எங்கெங்கு போனாலும் என் அன்பு வட்டத்திலே
ஏகாந்தமாகவே சுழன்றாடும் சிறைப்பறவை

கண்ணைத் திறந்துவிட்டாய் கவலையைப் போக்கிடும் கருமாரி நீயுந்தன் கண்ணைத் திறந்து விட்டாய்! அம்மா. அம்மா. அம்ம!

வேண்டிய வரங்களை ஈந்தாள்.

அகஸ்தியர் மனமகிழ்ந்தார்.

அகஸ்தியர் பூஜை செய்து கலசத்தில் ஆவாஹனம் செய்த அன்னையே இன்று திருவேற்காட்டில் அருள் மாரி பொழிகின்றாள்.

இந்த நிகழ்ச்சியை நினைக்கும்போது இன்னொரு வரலாறு நினைவிற்கு வருகிறது.

**காளேஸ்வரர்**

மகாகாளம் என்றொரு ஊர். அங்கே மகாகாளேசுவரர் தனது உமையோடு உறைகின்ற திருக்கோயில் உண்டு.

அந்த நாட்டை ஒரு மன்னன் ஆண்டு வந்தான். அவனும் சிவ பக்தன். கோயில்களில் பூஜைகள் நைவேத்தியங்கள் நாள் தவறாமல் சிறப்பாகச் செய்ய ஆணையிட்டு, அதற்கான மான்யங்களும் விட்டுச் சிறப்போடு வாழ்ந்து வரும்போது,

நாட்டில் மழைவளம் குன்றிப் பஞ்சம் ஏற்பட்டது. உயிர்கள் நீர் இல்லாமலும் பயிர்கள் செழிக்காமலும் வாடிக் காய்ந்து தீய்ந்து உலர்ந்து வேதனைப்பட்டுக் கொண்டுமிருந்தன.

"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்!"

பஞ்சத்தையும் மக்கள் பசியையும் போக்க மன்னன் அரும்பாடுபட்டான். நெற்களஞ்சியங்களைத் திறந்து முறைவைத்து மக்களுக்கு வாரி வழங்கினான். பொற்காசுகளை வைத்து அருகருகே உள்ள நாடுகளில் இருந்து தான்யங்களை வரவழைத்தும் பயனில்லாமல் போகவே, ஒன்றும் புரியாமல் மந்திராலோசனை மண்டபத்தில் மந்திரி பிரதானிகளைக் கூட்டி ஆலோசனை நிகழ்த்தினான்.

அப்போது ஒரு மந்திரி ஒரு ஆலோசனை வழங்கினார்.

“மன்னா! நமது நாட்டைச் சார்ந்த காட்டில் ஒரு ரிஷி தவமியற்றிக் கொண்டிருக்கிறார். அவரை அழைத்து வந்து நமது நாட்டில் காளத்தீச்வரர் ஆலயத்தில் ஒரு யாகம் நடத்திப் பெரிய பூஜைகள் நடத்தினால், அவர் தவ வலிமையாலும், கருணையாலும் இறைவன் மனமிரங்கி மழை பெய்வித்து நாட்டை வளப்படுத்துவார்” என்றார்.

“அமைச்சரே! நீர் சொல்வது சரியாகவே படுகிறது. போகட்டும். தவம் செய்து கொண்டிருக்கின்ற தவரிஷியின் தவத்தைக் கெடுக்கக்கூடாது. அவர் தவத்தைக் கலைத்தால் அவர் சீற்றத்திற்கும் சாபத்திற்கும் ஆளாக வேண்டியிருக்கும். அவ்விதம் நேராமலிருக்க ஒரு வழி சொல்லுங்கள்” என்றான் மன்னன்.

**பறை சாற்றுங்கள்**

‘நாட்டில் தண்டோரா மூலமாகப் பறைசாற்றுவதன் மூலம் கை மேல் பலன் கிடைக்கும்’ என்று ஒரு சுற்றறிக்கை தயார் செய்து மன்னனிடம் காட்டினார் அமைச்சர்.

“இதனால் நாட்டு மக்களுக்குத் தெரிவிப்பது என்னவென்றால் நம்நாட்டில் பஞ்சம்போக வேண்டுமானால் காட்டிலே தவமியற்றும் ரிஷியின் தவத்தைப் பக்குவமாய்க் கலைத்து அவரை நாட்டுக்கு அழைத்து

வரவேண்டும். இந்தக் காரியத்தைச் செய்பவர்களுக்கு அரச மரியாதையையும், பரிசும் கொடுக்கப்படும். இது மன்னர் உத்திரவு". இதுதான் அந்தச் சுற்றறிக்கை.

அரசன் ஆமோதித்தான்.

பறை சாற்றப்பட்டது.

மக்கள் மத்தியில் செய்தி பரவியது.

அந்த நகரத்திலே ஒரு நாட்டியக்காரி இருந்தாள். அவள் தேவதாசி இனத்தைச் சேர்ந்தவள். கோயிலிலே நாட்டியமாடும் பேரழகி.

மன்னரின் செய்தியைப் படித்துவிட்டு காட்டிற்குப் புறப்பட்டுப் போனாள்.

**அவளும் ஆட்டக்காரிதான்!**

கல்லும், முள்ளும், புதரும், பூண்டும், மரமும், செடியும், கொடியும் கொண்ட அந்தக் காடு பயங்கர மிருகங்களின் புகலிடம்,

அங்கே ஒரு அரசமரத்தின் கீழே ஒரு முனிவர் சடாமுடியும் நீண்ட தாடியும் காவி உடையும் வற்றிய முகமும் ஒட்டிய உடலுமாகத் தவமியற்றிக் கொண் டிருந்தார்.

அவர் ஆகாரம் ஏதும் உண்பதில்லை.

"இருக்குமிடம் தேடி உண்பதற்கு அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்போம்"

என்ற கொள்கையோடு உணவை வெறுத்துத் தவமியற்று கின்றார். அவர் உடல் மீது அரச இலையின் பழுத்த இலைகள் காற்றிலே இற்று வீழ்ந்தால் கண்களை மூடியபடியே அவற்றை எடுத்து வாயில் போடுவார். இதுவே ஆகாரம்.

உன் இதயம் இளகவில்லையா - காமாட்சி நாதா!
இரக்கம் பிறக்க வில்லையா?
ஊனினை உருக்கினாலும் உள்ளொளி பெருக்கினாலும்
உண்ணாமல் இருந்தாலும் உடலை வருத்தினாலும் -
இதயம் இளகவில்லையா - காமாட்சி நாதா!
இரக்கம் பிறக்க வில்லையா?

இப்படி இறைவனின் தரிசனத்திற்காகத் தவமியற்றும் சித்தர் அவர்.

அரச இலையை ஆகாரமாக உண்பதைப் பார்த்த நாட்டியப் பெண் வீட்டிற்கு வந்து அரச இலைபோலவே உளுந்தில் உப்பிட்டு அப்பளம் செய்து அதைப் பொரித்து எடுத்துப் போய், முனிவர் உடல் மீது ஒவ்வொன்றாகப் போட்டாள். அவரும் அரசம் பழுப்பே என்று எடுத்து ஆகாரமாக உண்டு வந்தார்.

"உடலெங்கும் திருநீறு உள்ளத்தில் பழச்சாறு
உடலெங்கும் பாம்பாரம் இடப்பாகம் சம்சாரம்
முடியினில் நீர்த்தாரை முகத்தினில் புன்சிரிப்பு
மடியினில் திருக்குமரன் மயக்கத்திலே இளங்குமரன்
உமையை அணைக்க வில்லையா - காமாட்சி நாதா!
பிறை நிலவை அணிய வில்லையா?"

இப்படி நாட்டியக்காரி பாடிக் கொண்டேயிருந்தாள்.

**மோனம் கலைந்தது!**

நாளடைவில் உப்பு சேர்ந்த அப்பளத்தால் உணர்வு பெற்றுக் கண்களைத் திறந்தார் - தியானம் கலைந்தது.

எதிரே மண்டியிட்டு வணங்கிய நிலையில் இருக்கும் பெண்ணரசியைப் பார்த்து, "யாரம்மா நீ?" எனக் கேட்கிறார் முனிவர்.

"சுவாமி! நான் காளத்தியைச் சேர்ந்த ஒரு நாட்டியக்காரி.

நாட்டில் பஞ்சம் ஏற்பட்டு உயிர்கள் நிறைய இறந்து இழப்பு மேலிட்டது. மன்னனால் பஞ்சத்தைப் போக்க முடியவில்லை. ஆகவே தாங்கள் ஒரு முறை எங்கள் நாட்டிற்கு வந்து மகாகாளேச்வரர் அம்மை குழல் மொழி நாயகியோடு அருளாட்சி செய்து வரும் சிவசக்தி திருக்கோயிலுக்கு எழுந்தருளுங்கள்.

பூஜையோடு யாகம் வளர்த்து, மக்கள் பஞ்சத்தைப் போக்க முற்றும் துறந்த முனிபுங்கவரான, சித்தராகிய தங்களால்தான் முடியும். ஆகவே தங்களை நாட்டிற்கு அழைத்து வருவதாக மன்னனிடம் உறுதி கொடுத்து வந்திருக்கிறேன்.

ஆகவே தயவு செய்து என்னுடன் நாட்டிற்கு வாருங்கள். மன்னனைச் சந்தித்து மேற்கண்ட யாகத்தை நடத்துங்கள்" என்றாள்.

"அது மட்டுமல்ல; பூஜையின் முடிவில் சிவசக்தி திருக்கோயிலில் எனது 'ருத்ரதாண்டவம்' என்ற நாட்டிய நாடகத்தையும் கண்டு களித்து அடியாளை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று பணிவோடு வேண்டினாள்.

சித்தரும் மகா முனிவருமான ஞானி நாட்டியக்காரியின் பின்னால் நாட்டிற்குப் போனார்.

**ருத்ரதாண்டவம்**

மன்னன் வெகு சிறப்பான முறையிலே வரவேற்புக் கொடுத்து மாமுனிவரை வணங்கினான்.

அவர் விருப்பப்படி யாகங்கள் செய்ய அதிகாரிகளை நியமித்து ஆவன புரிந்தான்.

அந்தணர்கள் வேதம் முழங்க மாமுனிவர் யாகங்களையும் பலவித பூஜைகளையும் செய்தார்.

அன்று திரளான மக்கள் கூட்டம்.

அன்று இரவு காளேச்வரர் ஆலய மண்டபத்தில் சந்நிதானத்துக்கு எதிரிலேயே மேடையமைத்து நாட்டிய நிகழ்ச்சிக்கு ஏற்பாடாயிருந்தது.

மன்னன், முனிவர், மந்திரி பிரதானிகள் புடைசூழ அமர்ந்திருக்க, நாட்டிய நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று.

நாட்டியக்காரி வள்ளியம்மை சிவபெருமானாகவும் மற்றொரு மங்கை சிவசக்தியாகவும் வேடம் புனைந்து வந்து ஆடத் தொடங்கினார்கள்.

நடராஜர் சிலை பின்னே-

பரதத்திற்கு இலக்கணம் வகுத்தவனல்லவா?

பரமன்- -

சிவனுக்குக் கோபம் வந்தது-

ருத்ர தாண்டவம் ஆட- ஆரம்பித்தார்.

வேடப் பொருத்தத்தோடு பரதக்கலையில் தேர்ச்சியும் பெற்றிருந்த வள்ளியம்மை மிக அழகாக லாகவத்துடன் அபிநயங்களை முகத்தில் தேக்கி ஆட ஆரம்பித்து விட்டாள்.

சித்தர் பெருமானோ தன் சிந்தையை ஒருநிலைப்படுத்தி மேடையிலே ஆடும் ருத்ர தாண்டவத்தை கவனித்தார்.

**ஞானக்கண்ணில் ஞானமானவர்**

என்ன ஆச்சர்யம்!

சிவபிரானேயல்லவா வள்ளியின் உருவில் கலந்து ஆடுகிறார். ஓ! வள்ளியின் தெய்வீக பரதக் கலையை

ஆமோதித்து அதில் ஐக்கியமாகிவிட்டானோ ஐந்தொழிலுக்கும் அதிபதியான பரமேச்வரன்!

மற்றவர்கள் வள்ளியம்மை ஆடுவதைத்தான் பார்த்தார்கள். சிவ முனிவரோ தம் ஞானக்கண்களால் மகேஸ்வரனே வந்து ஆடுவதைக் கண்டார்.

ஆனந்தம் தாள முடியவில்லை, முனிவருக்கு.

ஆஹா ! இந்த வள்ளியம்மை பெரும் பேறு பெற்றவள். இவளாலல்லவோ நாம் நாட்டிற்கு வந்தோம்- இவளாலல்லவோ யாகங்கள் பூஜைகள் இயற்றினோம். இவளாலல்லவோ இறைவனே ஆடும் இந்த ருத்ர தாண்டவத்தை பார்க்கும் பேறு பெற்றோம் என்று எண்ணி உடல் புல்லரிக்கும்போது அந்த விபரீதம் நடந்து விட்டது!

ஆம்! வள்ளியம்மை மிக ருத்ராகாரமாய் வேகமாக ஆடும்போது அவள் வலது காலிலிருந்த சலங்கைக் கொத்து திடீரென அறுந்து மேடையிலே சிதறி உருண்டு ஓடிற்று!

**சலங்கை அறுந்தது!**
**சங்கடம் உறைந்தது!!**

ஐயையோ, என்னப்பன் பொன்னம்பலத்தாடிய புகழ் வாய்ந்த கூத்தாடி சோமசுந்தரக் கடவுளல்லவா ஆடிக் கொண்டிருக்கிறார் வள்ளியம்மையோடு சேர்ந்து! சலங்கை அதிர்ந்து அறுந்து சிதறி விட்டதே!

வள்ளி நடுவிலே ஆட்டத்தை நிறுத்திவிட்டால் இறைவனின் ருத்ராகாரமாய் ஆடிய மனோநிலை சிதைந்து இறைவனின் கோபம் உச்சநிலை அடையுமே!

அக் கோப ஜுவாலையை யாராலும் கட்டுப்படுத்த முடியாது. மேலும் தீங்கு ஏற்படும்.

நாட்டிற்குக் கேடு எற்படும் என்று எண்ணி இவை யாவும் நிகழாமலிருக்க ஒரே வழி, வள்ளி தொடர்ந்து ஆட வேண்டும் என்று நினைப்பதற்குள்,

சலங்கை அறுந்த உடனேயே ஆடுவதை வள்ளி சட்டென நிறுத்தினாள்.

"வள்ளியம்மா! ஆட்டத்தை நிறுத்தாதே! ஆடு" என்று கூவியவாறு சித்தர்பிரான் எழுந்து மேடையேறி மேடையிலே அறுந்து உதிர்ந்துபோன சலங்கைகளைப் பொறுக்கிக் கோர்த்து நாட்டியக்காரியின் வலது காலைப்பிடித்து சலங்கைக் கொத்தைக் கட்டிக் கொண்டிருந்தார்.

இந்தச் செயலைக் கண்ட அறிவில்லா மக்கள் உடனே நகைத்து விட்டு, "ஓ. தவமுனிவர் நாட்டியக்காரியின் காலைப்பிடித்து சலங்கைகளைக் கட்டுவதா? இது தருமா?" என்றனர்.

இந்தப் பாமர மக்களுக்கு ஊனக் கண்கள்தானே உண்டு? ஞானிகளுக்கும், சித்தர்களுக்கும் முனிவர் களுக்கும் ஞானக் கண்கள் உண்டு என்பது புரியாத செம்மறியாட்டுக் கூட்டங்கள் தானே?

பொதுமக்கள் கேலி செய்வதும் சிரிப்பதும் முணுமுணுப்பதும் கரவொலி எழுப்பி நக்கல் செய்வதும் கண்ட சித்தருக்கு வந்ததே கோபம்!

சலங்கையைக் கட்டிவிட்டு எழுந்தவரின் கண்கள் சிவந்தன. முகம் துடித்தது. கோபாவேசம் கொண்டார்.

"மடையர்களே! அறிவிலிகளே!

இந்த மேடையிலே வள்ளி என்ற நாட்டியக்காரிதான் ஆடுகிறாள் என்று எண்ணி மேலோட்டத்தோடு என்னைப் பார்த்துப் பரிகசித்தீர்கள்.

இங்கு என்ன நடந்தது தெரியுமா?

சாட்சாத் சிவபெருமானே வள்ளியின் உருவில் கலந்து ஆடினான் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? உன்மத்தர்களே!

திருவாரூரிலே வீதிவிடங்கன் என்ற திருநாமத்தோடு சுவாஸ ரூபமான அஜபா நடனம் ஆடினார்!

திருநள்ளாறில் நாத விடங்கர் என்ற திருநாமத்தோடு உன்மத்த நடனம் ஆடினார்!

நாகப்பட்டினம் எனும் திருநாகைக்காரோணத்தில் சுந்தர விடங்கர் என்ற திருநாமத்தோடு கடலலைகள் போல் பாராவாரதரங்க நடனம் ஆடினார்!

திருக்காறா திருத்தலத்தில் ஆதிவிடங்கர் என்ற திருநாமத்தோடு கோழி தத்தித்தத்திப் போகிற மாதிரி குக்குட நடனம் ஆடினார்!

திருக்கோளிலி (திருக்குவளை) திருத்தலத்தில் அவனி விடங்கர் என்ற திருநாமத்தோடு வண்டு சுழல்வது போலப் பிருங்க நடனம் ஆடினார்!

திருவாய்மூரில் நீல விடங்கர் கடலலைகளின் நடுவே தாமரை மலர் எப்படி அலைமோதுமோ அப்படிக் கமல நடனம் ஆடியிருக்கிறார்!

வேதாரண்யம் என்னும் திருமறைக்காட்டில் புவனி விடங்கர் என்ற திருநாமத்தோடு அன்னம் சஞ்சரிப்பது போல் நடனம் ஆடினார்!

இப்படி சப்த விடங்க ஸ்தலங்கள் என்று சொல்லப் பட்ட ஏழு திருத்தலங்களில் இறைவன் ஏழுவிதத் திருநாமங்களோடு திரு நடனம் ஆடினார்.

ஆனால் - இந்த இரும்பை மாகாளம் தொண்டை மண்டலத்தில் உள்ள முப்பத்திரண்டு சிவஸ்தலங்களில் சிறந்தது.

இங்கே வள்ளியம்மை ஆடினாள், நீங்கள் கண்டீர்கள். நானோ, அவள் உருவோடு கலந்து எம்பெருமான் மகேச்வரன் காளேஸ்வரன், அம்மை குயில்மொழி நாயகி கண்டு களிக்கக் குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயில் குமிழ் சிரிப்பும் கொண்டு ஆடியதைக் கண்டேன். சலங்கை அறுந்ததால் வள்ளி ஆடுவதை நிறுத்தி விடுவாள். ஆட்டம் நின்று விட்டால் உச்சக் கட்டத்தில் ருத்ராகாரமாக ஆடிக் கொண்டிருந்த ருத்ரன் தடையால் தணல்போல் சினந்து இந்த நாட்டையே அழித்து விடுவார். அவர் கோபத்திற்கு இந்த நாடும், நாட்டு மக்களும், நானும் மன்னனும் ஆளாகக்கூடாது என்று துணுக்குற்று எழுந்து ஓடிவந்து சலங்கையைக் கட்டினேன்.

நான் வள்ளியின் காலைப் பிடித்ததாக நீங்கள் நினைத்தீர்கள். சிவபிரானின் காலைப் பிடித்து சலங்கை கட்டும் பாக்யம் கிடைத்ததே என நான் பெருமை பட்டேன்.

அதற்குள் அவசரப்பட்டுவிட்டீர்கள்" என்றவர் சந்நிதானத்தில் அமர்ந்திருக்கின்ற திருக்காளேஸ்வரரைப் பார்த்து,

"வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியைச்
செல்லும் பொழுது செலுத்திடுவேன் சிந்தையை
அல்லும் பகலும் உந்தனையே தொழுதேன்
கல்லும் பிளந்து கழுவெளியாமே"

என்று கோபமாகப் பாடினார்.

அவ்வளவு தான்! அடுத்த கணத்திலே காளேஸ்வரர் மூலத்தானத்திலிருந்து ஒரு பேரோசை இடி இடித்தது போல் கேட்டது.

எல்லோரும் அதிர்ச்சியடைந்தார்கள். மன்னன் எழுந்து மூலத்தானத்திற்கு ஓடிப் பார்த்தான்.

உள்ளே கருவறையிலிருந்த சிவலிங்கத்தின் தலைப் பகுதி வெடித்து வெளியில் எங்கோ ஓடி மறைந்தது!

**வசைபாடினார் சித்தர்!**

ஆமாம். மன்னன் மருண்டான்.

முனிவர் கோபத்தோடு விடுவிடென்று காட்டிற்கு புறப்பட்டுப் போனார்!

மன்னன், உடைந்த பகுதி விழுந்த இடம் தேடினா .

ஊரையடுத்த ஓரிடத்தில் அது வீழ்ந்திருந்தது! அந்த இடம் வெந்து தீய்ந்து கழுவெளியாயிற்று!

வெடித்து வீழ்ந்த சிவலிங்கத்தின் ஒரு பகுதியை எடுத்து வந்து மறுபடியும் யாகம் வளர்த்துக் கும்பாபிஷேகம் செய்து அதை சிவலிங்கத்தோடு பொருத்திச் செம்பு பட்டத்தால் கட்டிவைத்தான்.

இன்னும் இரும்பை மாகாளத்தில் மூலத்தானத்தில் கட்டுப்போட்டுள்ள சிவலிங்கத்தைக் காணலாம்.

கழுவெளி உண்டாகக் காரணமாயிருந்த சித்தரை நினைவு கூறும் வண்ணம் 'கழுவெளி சித்தர்' என அந்த மகாசக்தி வாய்ந்த முனிவர் அழைக்கப்படுகிறார்.



# மாரி - மகமாயி - கருமாரி

'மாயி மகமாயி மணிமந்திர சேகரியே
ஆயி உமையானவளே ஆஸ்தான மாரிமுத்தே
வேப்பிலையும் பொற்கரகம் வீதிவிளையாடிவர
ஆயிரம் கண்ணுடையாள் அலங்காரி வாருமம்மா"

மாரி என்றால் மாரியம்மன் என்று கிராமத்தில் பாமர மக்களால் அழைக்கப்படுபவள்.

மாமாயி என்பதே மாரியாக மாறி இருக்கிறது. தேவி மகாத்மியத்தில் மாரி என்ற சொல்லில் பராசக்தி அழைக்கப்படுகிறாள்.

பன்னிரண்டாவது அத்தியாயத்தில்

"மகாகன்யா, மகாகாலே, மகாமாரி
ஸ்வரூபயா சைவகாலே மகாமாரி
சைவசிருஷ்டிர் பவத்திய ஜா"

என்று கூறப்பட்டுள்ளது.

அருணகிரி நாதர், நாகபூஷணி என்றும், குண்டலினி என்றும், ஆதிசக்தி என்றும் நீலி என்றும், நீலமாரி, மகமாரி என்றும் பல பெயர்களில் ஜெகன்மாதாவை அழைக்கின்றார்.

மாரி கருவிலே மாறினாள். கருவிலே உருமாறினாள் என்பது சிறப்பான அம்சம்.

**இதோ ஒரு கதை**

அம்பிகை எப்போது கருவில் மாறினாள்?

கம்சன் என்றொரு அரசன் இருந்தான். அவனுக்கு ஒரு தங்கை. அவள் பெயர் தேவகி. அவளுக்கு மணமுடித்து தங்கையையும், அவள் கணவனையும் ரதத்திலே அமர்த்தி ஊர்வலம் போகும்போது

**அசரீரி வாக்கு ஒன்று வானிலிருந்து கம்சனை எச்சரித்தது!**

'கம்சா! உன் தங்கையின் மீது உயிரையே வைத்திருக்கிறாய். பாசத்தைப் பொழிந்து திருமணம் செய்து விட்டாய். தேவகிக்குப் பிறக்கப் போகும் பிள்ளை களால்தான் உனக்கு அழிவு. அதைப் புரிந்துகொள். உனக்கு வெளி விரோதி யாருமில்லை. உறவிலேயே உள்ள கருவால்தான் நீ கருவறுக்கப்படுவாய்" என்ற குரலைக் கேட்டதும் அதிர்ச்சியும் கோபமும் அடைந்த கம்சன் தேரை அரண்மனைக்கே திருப்பி ஓட்டினான்.

தேவகியையும் அவள் கணவனையும் ஒரே சிறையில் அடைத்து வைத்தான்.

> தேவகியின் பிள்ளைகளால்தான் தொல்லை கள் என்றறிந்தும் இருவரையும் பிரிக்காமல் மனிதாபி மானத்தோடு சேர்த்தே சிறையில் இட்டான்.

கருவுற்றாள் தேவகி. தலைப்பிரசவமல்லவா? ஒரு பிள்ளை பிறந்தது - கம்சனுக்கு அறிவிக்கப்பட்டது. பிறந்த பிள்ளையைக் கையில் வாங்கித் தரையில் அடித்துக் கொன்றான்!

தாயும் தந்தையும் கதறினர்!

அடுத்த குழந்தை பிறந்தது - அதுவும் கொல்லப் பட்டது.

**இதோ ஒரு திட்டம்**

இப்போது மகாவிஷ்ணு கிருஷ்ணாவதாரம் எடுக்கப் போகிறார். அவர்தான் கம்சனைக் கொல்லப் போகிறார். ஆகவே அவர் மகாமாயையை, அதாவது யோக மாயையை அழைத்துக் கூறினார்.

"தேவகி தன் ஆறு குழந்தைகளை வசுதேவன் மூலமாகப் பெற்று அண்ணன் கம்சனிடம் கொடுத்து விட்டாள். அனைத்தையும் கம்சன் கொன்று விட்டான்.

இப்போது ஏழாவது கர்ப்பம் உருவாகப் போகிறது. என் அம்சமான ஆதிசேஷன் ஏழாவது கர்ப்பத்தில் உருவாவான்.

வசுதேவனுக்கு இன்னொரு மனைவியிருக்கிறாள், ரோகிணி என்று பெயர். அவள் கோகுலத்தில் இருக்கிறாள்.

அவள் வயிற்றில் வாயு ரூபமான கர்ப்பம் இருக்கிறது. அதைக் கலைத்துவிடு. தேவகியின் ஏழாவது கருவை மாற்றி ரோகிணியின் வயிற்றில் சேர்த்து விடு.

தேவகியின் கர்ப்பம் சிதைந்து போயிற்று என்று அரண்மனை முழுதும் பேச்சு எழும்.

அதே நேரத்தில் ரோகிணி வயிற்றிலே உருவான ஆதிசேஷன் அம்சம் குழந்தையாக உதிப்பான். பலராமன் என்று பெயர் பெறுவான்.

தேவகியின் ஏழாவது கரு சிதைந்தது அறிந்து கம்சன் ஏமாற்றமடைவான்.

நான் எட்டாவது கர்ப்பத்தில் தேவகியின் வயிற்றில் உதிரத்திலே பிரவேசிப்பேன்.

அதே நேரத்தில் ஸ்ரீ நந்தகோபன் மனைவியான யசோதையின் வயிற்றில் நீ பிரவேசித்துவிடு.

நமது இருவரின் சக்தியால் மாயையாகிய நீ தேவகி வயிற்றில் தங்குவாய். நான் யசோதையின் வயிற்றிலே தங்குகிறேன். இருவரும் இடம் மாறுவோம்.

எனக் கூறியிருந்தபடி,

தேவகியின் எட்டாவது கர்ப்பத்தில் உருவான மாயன், யசோதை கர்ப்பத்தில் உருவானான்.

மாயை தேவகி வயிற்றில் உருவானாள்.

எட்டாவது குழந்தை பெண்ணாகப் பிறந்திருக்கிறது என்று கம்சனுக்கு அறிவிக்கப்பட்டது. கம்சன் சிறைச்சாலைக்கு வந்தான்.

**இது என்ன மாயம்?!**

அழகான குழந்தை! இத்தனை குழந்தைகளைவிட அதிரூபசுந்தரமாய் அழகாய் இருந்தது - பெண் குழந்தை! அதைக் கையிலே வாங்கினான்.

கால்களைப் பிடித்துப் பாறாங்கல்லில் அடிக்க ஓங்கினான்.

ஆனால் அவன் கையிலிருந்து அந்தக் குழந்தை வழுக்கிக் கீழே வீழ்ந்தது.

அதை எடுக்கக் குனிந்தான்.

உடனே மறைந்தது! தவித்தான். அதோ! அங்கே இருக்கிறது குழந்தை.

"அண்ணா! அண்ணா! என் அருமைக் குழந்தைகள் ஏழினைக் கொன்றாய். இது எட்டாவது பிறந்திருக்கிறது. இதையாவது விட்டு விடக்கூடாதா? இது பெண்பிள்ளை

தானே? இவள் உன்னை என்ன செய்துவிட முடியும்?" எனக் காலில் வீழ்ந்து அழுதாள். கண்ணீரால் அண்ணனின் பாதங்களைக் கழுவினாள்.

"ஏழு குழந்தைகளைக் கொன்றேன் என்றாயே தேவகி! ஆறு குழந்தைகளைத்தானே கொன்றேன். ஏழாவது குழந்தைதான் கர்ப்பம் கலைந்து அழிந்து விட்டதே. ஏமாற்றமடைந்த எனக்கு இதையும் கொல்லாவிட்டால் என் கதி என்ன ஆகும்?" என அந்தக் குழந்தையை எடுக்கப் போனான்.

**விஸ்வருபத்தில் வேதவதி**

என்ன அதிசயம்! அந்தக் குழந்தை ஆதி பராசக்தியின் அம்சமல்லவா? வானை முட்டும் உயரத்திற்கு விசுவருபம் எடுத்தாள்! கம்சன் அதிர்ந்து நடுங்கினான்!

விஸ்வருபம் எடுத்த மாயை எனும் அந்தப் பராசக்தி கூறினாள்.

"ஏ மூடா! கம்சா! என்னை அழித்துவிட நினைத்தாயா? ஒரு நொடியில் நானே உன்னை இப்போதே கொன்று விடுவேன். ஏன் அப்படிச் செய்யவில்லை தெரியுமா? நான். ஆதிபராசக்தியின் அம்சமானவள். நீ என் எதிரியாயிருந்தாலும் நான் உன்னைக் கொல்ல மனம் இடம் தரவில்லை.

•என் கால்கள் இரண்டையும் பற்றித்தானே பாறையில் மோதிட எத்தனித்தாய்.

என் பாதங்களை நீ பற்றியதால் கருணை மிகக் கொண்டு உன்னை விட்டு விட்டேன். என் அருளே அப்படித்தான்.

உன்னைக் கொல்ல இருப்பவன் வேறொரு இடத்தில் பிறந்திருக்கிறான். ஜாக்கிரதை! அவனால்தான் உனக்கு

மரணம் நேரிடும்" என எச்சரித்து மறைந்து போனாள் மாயை.

எதிரிக்கும் அருள் புரிபவள் அன்னை ஆதிபராசக்தி என்பது புரிகிறது.

இப்படிக் கருவிலே மாறியதால் கருமாரி என ஒரு காரணப் பெயர் ஏற்பட்டது. மாரி - மகமாயி - கருமாரி எல்லாம் ஒரே அம்சம்தானே.

**அபிராமிபட்டர்**

திருக்கடவூரிலே அந்த நாட்டு மன்னனிடம், அமாவாசையன்று, "இன்று பௌர்ணமி" என்று அபிராமிபட்டர் என்ற அம்பாள் உபாசகர் சொன்னதை மெய்ப்பிக்க அன்னை பராசக்தி தன் காதிலுள்ள தோட்டைக் கழட்டி வானிலே எறிந்து பௌர்ணமி நிலாவைக் காட்டி அபிராமி அந்தாதி பாடச் செய்து அருள் பாலித்தாள் என்பது உலகறிந்த சிறப்புச் செய்தி அல்லவா?

**ஞானக் குழந்தை**

சீர்காழியிலே குளத்தங்கரையில் அமர்ந்து "அம்மே!" என்று அழுத சம்பந்தனுக்கு அன்னை ஞானப் பால் கொடுத்து ஞானசம்பந்தனாக்கி,

**"தோடுடைய செவியன் விடை யேறியோர்**
**தூவெண்மதிசூடி"**

எனப் பாடவைத்துச் சைவ சமயத்தை நாடெங்கும் பரவச் செய்து அவன் மூலமாக அருள் விளையாட்டை அருளினாளே அதை உலகம் உணராததா?

**சுந்தரமூர்த்தி நாயனார்**

திருவொற்றியூரில் கண் இழந்த சுந்தரமூர்த்தியின் இடக் கண்பார்வை கிடைத்தது காஞ்சீபுரத்தில் காமக்கண்ணியான காமாட்சியம்மனின் பேரருளாலல்லவா?

**அன்னையின் பேரருள்**

கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் ஆறுமுகனை வளர்த்தவர்கள் என்ற உரிமையில் சிவபெருமானிடம் சென்று எங்களுக்கு அஷ்டமாசித்தி பற்றி உரைக்க வேண்டுமென்று வேண்டினார்களே, அப்போது மகேச்வரன் இடப்பக்கமாயிருந்த அன்னை மகேஸ்வரி உமையவளைக் காட்டி இவளை நீங்கள் சிந்தித்தால் உங்கள் பழைய வினைகளைப் போக்கி அஷ்டமா சித்திகளை அளிப்பாள் என்றதும் ஆதிபராசக்தியிடமே உபதேசம் பெற்றதை நாம் அறியோமா? அன்னையின் பேரருள் உற்று உணர வேண்டியதல்லவா?

**ஏழு கடல்கள்**

மதுரையில் மீனாட்சியம்மை தனது அன்னையான காஞ்சனமாலை கடல் நீராட விரும்புகிறதா என்று சோம சுந்தரேசரிடம் கேட்க,

சிவ பெருமான் ஏழு கடல்களையும் மதுரைக்கு அழைத்தார்.

இறந்துபோன கணவனோடு சேர்ந்து நீராட விரும்புவதாக மீனாட்சியிடம் காஞ்சனமாலை கூற அதை சுந்தரேசரிடம் சொல்லி,

இறந்துபோன தன் தந்தையை உயிர்ப்பித்து தன் அன்னையின் நெற்றியில் குங்குமத்தைத் துலங்க வைத்த மகாசக்தி மாயை மீனாட்சியல்லவா?

இப்படிப்பட்ட அன்னையே மாரியாக மகமாயியாக கருமாரியாக உருமாறினாள்.

# ஏகசக்தி ஆதிபராசக்திதானே?!

**நாகலோகமே வந்தது!**

எல்லா உலகங்களையும் வலம் வரும் நாரதர் பாதாள லோகத்தில் உள்ள நாகலோகத்தில் கருநாகமாய் உறையும் கருமாரி அன்னை திருவேற்காட்டிலே உறைகிறாள் என்று கூறக் கேட்டு,

நாகலோகத்து நாகங்கள் அனைவரும் திருவேற் காட்டுக்கு வருகை தந்து அன்னை கருமாரியை வணங்கினர்.

இதில் ஒரு அதிசயத்தைப் பார்த்தன நாகலோகத்து நாகங்கள்.

பஞ்சபூதங்களே ஐந்துதலை நாகமாகி அன்னைக்குத் தலைக்கு மேலே குடைபிடித்து இருக்கும் காட்சியைக் கண்டு பிரமித்தன.

நாகங்களுக்குத் தலைவன் நாகராஜன். செங்கன் என்கிற கருநாகன் மகேசுவரனுக்குக் குடையாக இருக்கிறது. பத்மன் மகாபத்மன் இரண்டும் சிவனின் காதணிகளாகத் தொங்குகின்றன.

வாசுகி என்ற பாம்பு பரம்பொருளின் மீது தவழும் பூனூல்.

குளிகனும், அனந்தனும் இறைவனின் புஜத்தில் அணியும் கடகம் (கடையம் என்பர்).

தக்ஷன் என்ற பாம்பு இறைவனின் அரைஞாண் கயிறு. காளிங்கனின் தலைமீதுதான் கண்ணன் நடனமாடி அதன் சீற்றத்தை அடக்கினான்.

ஆதிசேஷன் பூமியைத் தாங்குபவன். ராகு கேது நவக்கிரகங்களில் இருவர். கார்க்கோடகன் என்ற கொடிய பாம்பு இறைவனுக்கு மாலை.

கொடிய பாம்புகள் எப்படி இறைவனுக்கு ஆபரணங் களாக இருக்கின்றன பார்த்தீர்களா?



# மாயையும் அவளே!

"காலில் சலங்கை கொஞ்ச
கைகளில் வளை குலுங்க
பால்மன மதிமுகத்தில்
பஞ்சவர்ணக்கிளி மயங்க

துவண்டிடும் கொடியிடையாள் தோகை வண்ண
நடையுடையாள்
ஆகாய வீதியிலே அன்ன நடை பயிலுகின்றாள்
ஓம் சக்தி உமையவளே ஓங்கார மெய்ப்பொருளே
ஓடிவா! ஆடிவா! அழகனை அழைத்து வா...
அம்மா! அம்மா! அம்மா!

கல்என்று எண்ணினேன் கனல் எனத் தகித்திட்டாய்
கண்களும் கோவைப்பழமாய்
நில்என்று சொல்லிட்டேன் நெருப்பென்று நிமலிநீ
நேத்திரங்கள் மலர்ந்து நின்றாய்
சொல்லொன்று சொன்னாலே சுவையுடன் கேட்டிட்டு
சூலி நீ ஆடிவந்தாய்
வில்லொன்று ஏந்தியே வீரநடை பயின்றுமே
வீராங்கனை ஓடி வந்தாய்
புல்என்று என்னையும் உதாசினங்கள் செய்கின்றார்
பத்ரகாளி என்னுள் வந்தாய்

நல்லவர்கள் இதயத்தில் நடுங்க வைக்கும் பயங்கரிநீ
நாளெல்லாம் குடியிருந்தாய்

சேல்விழி சிவந்திட செங்கதிர் பரப்பிட
செவ்வந்தி மலர்கள் சூட
வேல் புருவம் அசைந்திட வெண்ணீறின் நடுவிலே
குங்குமம் சிவந்து நிற்க
சங்கொத்த கழுத்திலே சங்கராபரணங்கள்
சரிந்துமே ஒடியாட
அங்கங்கள் அழகாக ஆகாய வீதியில்
மெல்லிடை வளைந்து ஆட
செங்கதிர்வானிலே சேல்விழி உமையவள்
சதிராட்டம் சலங்கையாட
கொங்கைகள் குலுங்கிடக் குவலயம் ஆடிட
குன்றுகள் தானு மாடப்
பண்பாடப் பண்ணுக்கு நீயாட நானாடப்
பாரிலுள்ளோர் தானுமாட
எண்திக்கி லுள்ளோர்கள் ஏங்கித் தவித்திட
எடுத்த அடிதாளம் போட

சங்கரன் மனம் மயங்கிச் சங்கீதம் பாடிடச்
சலங்கைகள் அதிர்ந்து ஆடி
தாங்காத கோபக்கனல் கொண்டிட்ட உன்முகத்தில்
சாந்தத்தை வரவழைக்க
பாடினேன் பாட்டொன்ற பாவலன் உன்மைந்தன்
படிப்படியாய் சினம் தணிக்க
ஓடினேன் வாடினேன் உளமாரப் பாடினேன்
உன் கோபம் தணிந்து நிற்க

கருணை மழை பொழிந்துவரக் காப்பவள் நீலிஉன்
கையிலே வேப்பிலை ஆட

தருணமிது தேவிநீ சாந்த சொரூபிணியாய்
தவழ்ந்துமே பனிமலர் போல்
குளிர்ந்திடு மனமெல்லாம் கோபத்தை மறந்திட்டுக்
குணக்குன்றாய் மிளிர்ந்திடம்மா
தளிர்க்கின்ற பூஞ்செடிக்குத் தண்ணீரை ஊற்றியே
தவவலிமை ஏற்றிடம்மா

கொப்பளிக்கும் கோபத்தில் தகிக்கின்ற செவ்வந்தி
மலர்முகமே குளிர்ந்திடம்மா
இப்புவியில் உன் பெருமை பரவிடவே எங்கள்முன்
எதிர்வந்து காட்சி தருவாய்
அம்மாநீ! பத்ரகாளி! நவகாளி! கருமாரி!
மாரியம்மன் துர்க்கை நீயே!
அபிராமி! உமையவள்! மீனாட்சி! காமாட்சி!
விசாலாட்சி! காளி! நீயே
அத்தியூர் குளக்கரையில் அமர்ந்தவளே மாதாவே
அழகான குங்குமக் காரி!
இத்தருணம் எங்களின் குறைதீர சூலத்துடன்
எங்கள் முன் காட்சி தருவாய்!

**அன்னை ஆடினாள்**

*மாயாவான அன்னை ஆதிபராசக்தி எப்படி எப்படி இருக்கிறாள். அவள் ஆகாய வீதியில் ஆடிவரும் போது என்னென்ன அழகுகள் மிளிருகின்றன?! அவள் ஆடும்போது உலகங்கள், அண்டங்கள் உயிர்கள் எப்படி ஆடுகின்றன. அவள் ஆங்காரியாய் ஓங்காரியாய் எந்தெந்த உருவாய் மாறி மாறி அருள் புரிகின்றாள் என்பது மேற்கண்ட பாடலால் தெரிகிறது.*

*இந்தப் பாடலை எந்தப் பூஜையில் பாடினாலும் அன்னை காளிவந்து மகிழ்ந்து ஆடி மகிழ்வாள் என்பது*

குறிப்பிடத்தக்கது இது சக்தி உபாசகர் சிவசக்தியின் ஞானப்பாடல்.

உலகம் உயிர் இறைவன் ஆகியவற்றினுள்ளே ஊடுருவியுள்ள ஆற்றலே பராசக்தியாகும்.

அந்த சக்தி தேவியே எல்லாம் வல்லவள் எங்கும் எதிலும் நிறைந்தவள். உலகத்தைப் பிரம்மா உருவாக்கிப் படைக்கும் போதும், மகாவிஷ்ணு உலகத்தைக் காக்கும் போதும், ருத்ரர் காலாக்னியாக உலகங்களையெல்லாம் அழிக்கும்போதும், அந்த சக்தி தேவியே ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களுக்கும் மூல தேவதையாக விளங்குகிறாள்.

பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் அவளுக்கு விளையாட்டுப் பொருள்களே.

**சக்தியின் அம்சமே**

படைப்புக் கடவுளான பிரம்ம தேவனுக்குக் கலைமகள் நாயகிவடிவமாகவும், காத்தற் கடவுளான மகா விஷ்ணுவுக்கு திருமகள் நாயகி வடிவமாகவும் அழித்தற் கடவுளான ருத்ரனுக்கு மலைமகள் நாயகி வடிவமாகவும் அந்த சக்தி தேவியின் அம்சங்களே இருந்து அக்கடவுளர்களின் தொழில்களையெல்லாம் இயங்கச் செய்கின்றன.

மனிதன், மிருகம், பறவை, ஊர்வன, நீந்துவன ஆகிய உயிர் வகைகளிலும், உயிரின் ஆற்றலாகவும், ஊக்கமாகவும், ஊட்டமாகவும், பெண்மைச் சக்தியே இயங்கி வருகிறது. பெண் இல்லையெனில் பிறவிகளே இல்லை. வாழ்க்கை இல்லை. உலகம் இல்லை. சந்ததிகள் இல்லை.

அந்தப் பெண்மையின் ஆற்றல்தான் சக்தி தேவி. அவளே ஆண்மையின் ஆற்றலாகவும் இயங்கி, இயங்கவும் வைக்கிறாள்.

நாதம் என்பதன் தன்மை வடிவினளாக விளங்குபவள். பரை என்ற சக்தியானவள் அந்த சக்தி. மூலாதார சக்ரத்தில் எந்த விதமான பகுத்தறிவிற்கும், ஞான விசாரங்களுக்கும், புத்தி யுக்திகளுக்கும், புலனாகாமல் ஜோதிமயமாக விளங்குகிறாள்.

பிந்து என்பதின் தன்மை வடிவினளான பஸ்யந்தி என்ற சக்தியானவள் இதய வானத்தில் த்ருவ்ருத் என்ற ஓங்கார பிரணவமாக விளங்குகிறாள்.

இப்படி ஶ்ரீ கந்தபுராணத்தில் மானசகாண்டத்தில் அமைந்திருக்கும் தேவி பாகவத மகாத்மியம் என்ற பகுதியின் சாரத்தில் ஒருதுளி மேலே கூறப்பட்ட அன்னை மகிமை.

மகாமாயையின் தோற்றத்தின் அடிப்படை இன்னும் நிறைய இருக்கிறது.

மிகுந்த பராக்ரமசாலியான வரமளிக்கும் மகாமாரி, மகமாயி, மகாசக்தி, மாரி சக்தி, மந்திரசக்தி, அருள்மாரி, கருமாரி எல்லாம் அவளே.



# சிவசக்தியை உணர்ந்த பிருங்கி

ஒரு சமயம் கயிலாயத்தில் சிவனும் உமாபிராட்டியும் அருகருகே அமர்ந்து அன்பர்களுக்கும் மற்ற விஷ்ணு, பிரம்மா இந்திரன் தேவர்கள் முதலானவர்களுக்கும் அருள் பாலித்திருக்கும்போது,

பிருங்கி மகரிஷி என்ற சிவ பக்தர் கயிலாயத்திற்கு வந்தார்.

வந்தவர் சிவனை மட்டும் வலம் வந்தார். இது சக்திக்குப் பிடிக்கவில்லை.

"பிருங்கி ரிஷியே! சிவனும் சக்தியும் சேர்ந்ததுதான் பரப்பிரம்மம். அப்படியிருக்கும்போது என்னை விடுத்து சிவனை மட்டும் வணங்குகிறாயே ஏன்?" எனக் கேட்டாள் சக்தி.

அதற்கு பிருங்கி, "உமாமகேஸ்வரி! நான் சிவபக்தன். சிவபிரானை மட்டும் சுற்றி வந்தாலே போதும்" என மீண்டும் சுற்றினார்.

"மகேச்வரா! பிராண நாதா! பிருங்கி செய்வது தவறல்லவா? உங்களுக்குக்கூடத் தெரியாதா? - வாளாவிருக்கிறீர்களே" எனக் கேட்டாள் உமா.

"என் அன்பன்- நான் என்ன சொல்ல முடியும்?" என்றார் சிவபெருமான்.

உடனே சக்தி சிவனோடு நெருங்கி உட்கார்ந்தாள், இடைவெளியில்லாமல்.

இதைக் கண்ட பிருங்கி முனிவர் ஒரு வண்டு உருவமெடுத்து சிவனுக்கும் சக்திக்கும் இடையிலே புகுந்து உடலைத் துளைத்துக் கொண்டு போய் சிவனை மட்டும் சுற்றி வந்தார்.

**சக்தி இல்லையேல்?**

இப்போது சக்திக்குக் கோபம் வந்தது. தன் சக்தியை எடுத்தாள். உடனே தசை, நார், நரம்புகள் இரத்தம் அனைத்தும் பிருங்கியின் உடலிலிருந்து உதிர்ந்து போயின. வெறும் எலும்புக்கூடு மட்டும்தான் மிஞ்சி நின்றது.

இப்போதும் பிருங்கி மனம் தளரவில்லை. சிவமான எலும்புக்கூட்டோடு மெல்ல நடந்து சுற்றி வர முயன்றார்.

முடியவில்லை. தடுமாறி வீழ்ந்தார். சக்தியில்லையேல் இயங்கவே முடியாதே. சிவமே சக்தியால் தானே இயங்குகிறது.

"என் செல்வமே! சிவபெருமானே! ஏகாந்த நாதா! எல்லையில்லாப் பரம்பொருளே! வேதமாய் ஒளிர்ந் தவனே! வித்தகனே! பிரணவமே! நாதமே!.. சக்தியைப் பிரிந்த சிவத்தோடு நடக்கிறேன், நடக்க முடியவில்லையே? என் செய்வேன்?" என்று கண்ணீர் விட்டழுதார் பிருங்கி.

தன் பக்தன் கண்ணீர் சிந்துவதைப் பார்த்து மனம் பொறுக்காத மகேச்வரன் இரண்டு கால்களோடு மூன்றாவது காலைக் கொடுத்தார்.

மூன்று கால்களால் நடந்தும் முடியவில்லை!

**உணர்ந்தாலே போதும்**

இப்போது தான் புரிந்தது பிருங்கி முனிவருக்கு. 'சிவமும் சக்தியும் சேர்ந்தால்தான் இயங்க முடியும். ஆகவேதான் சக்தி உயர்ந்திருக்கிறாள். ஆகவே சிவசக்தியைச் சேர்த்துச் சுற்றி வருவதும் வணங்குவதும் தான் முறையான வழிபாடு' என.

சக்தியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். "அம்மையே! அம்மையே அப்பா என்பதில் முதலில் அன்னையைத் தானே குறிப்பிடுகின்றார்கள். ஆகவே நீயின்றி ஓர் அணுவும் அசையாது என்பதைப் புரிந்து கொண்டேன். என்னை மன்னித்துப் பேரருள் புரியவேண்டும்" எனக் கேட்டுக் கொண்டார்.

உமா பிராட்டி மன்னிப்பு கேட்ட பிருங்கி முனிவரின் சக்தியை வழங்கினாள்.

மறுபடி தசை, நார், நரம்புகள், இரத்தம் அனைத்தும் ஒன்ற கூடி எலும்புக்கூட்டில் பொருந்தின.

இப்போதுதான் சிவமாகிய எலும்புக்கூட்டிற்குச் சக்தியாகிய ஏனை உபகரணங்கள் அவசியம் தேவை என்பதை உணர்ந்தார்.

பிறகு இருவரையுமே சுற்றி வந்து, "அன்னையே காமாட்சி அப்பனே விசுவநாதா! எனக்குத் தங்கள் பேரருள் என்றும் கிடைக்க வழி செய்வீராகுக" என்றார்.

சக்தி பிருங்கியை அழைத்து இப்போது சக்தியை அருளினாள்.

"பூலோகத்தில் தொண்டை மண்டலத்தில் திருவேற் காட்டில் கருமாரியாக அமர்ந்திருப்பேன். அங்கே வந்து உன் சக்தியை முழுவதுமாகப் பெற்றுக் கொள்வாய்" எனச் சொல்லி அனுப்பினாள்.

**திருவேற்காட்டில் பிருங்கி**

பிறகு பல ஆயிரக்கணக்கான காலங்கள் உருண் டோடிப் போக,

திருவேற்காட்டிலே கருமாரியம்மன் கொலு வீற்றிருப்பதைப் பார்த்து அங்கே வந்து தவமியற்றினார்.

பிருங்கி முன் தோன்றிய அன்னை பராசக்தி,

"பிருங்கி மாமுனியே!

ஆதியில் என்னைப் புறக்கணித்து எனது பாதியான சிவத்தை மட்டும் சுற்றினாய். நீ ஒரு தவமுனிவன். எப்போதும் தவமியற்றிக் கிடப்பவன் என்ற காரணத்தால் அப்போது உம்மை அந்த அளவிலே அனுப்பி வைத்தேன்.

நீ சிவசக்தி ஐக்யத்தை உணர்ந்து 'சிவமே சக்தி - சக்தியே சிவம்' என்ற தத்துவத்தைக் கடைப்பிடிப்பதால், நீ முதிர்ந்துவிட்டதால் எமது பேரருள் உண்டு. பரிபூர்ண ஆசிகளை வழங்குகிறேன்" என மறைந்தாள் ஆதிபராசக்தி.

மாயை என்பது உயிர்களை மயங்க வைக்கும் ஒரு மாய சக்தி. அது தான் உலக வாழ்வியல் இன்பதுன்பங்களுக்கு வழிகாட்டியாய், ஆசை, மோகம், வெகுளி, காமம், குரோதம், இளமை, மூப்பு, மரணத்திற்கு அடிப்படைக் காரணமாய் அமைவது.

ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களுள் மாயையும் முக்கிய இடம் பெற்றிருக்கிறது.

**சைவசமய தத்துவம்**

நம் கையில் உள்ள விரல்கள் ஐந்து. அதில் ஒரு அரும்பெரும் தத்துவமே அமைந்துள்ளது காண்பீர்.

கட்டைப் பெருவிரல் பரம்பொருளான இறைவன். ஆள் காட்டி விரல் உயிர். மற்ற நடு விரலும் மோதிர

விரலும் சுண்டு விரலும் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள்.

உலகில் உற்பத்தியானதுமே அதாவது தாயின் தொடைகளின் இடையே அல்குல்வழியாகக் 'கீச்' சென்ற குரலெழுப்பி, மண்ணிலே வீழ்ந்த உடனேயே, அந்த உயிரை மும்மலங்கள் பற்றிவிடுகின்றன.

அதாவது ஆள்காட்டி விரல் மற்ற நடுவிரல், மோதிர விரல், சுண்டு விரலோடு சேர்த்து விடுகின்றது. இறைவன் கட்டை விரல் தனித்தே இருக்கின்றது.

உலக மாயைகளில் பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை போன்ற மலங்களில் மூழ்கி மூழ்கி எழுந்து அவற்றை வெறுத்து, இறைவனைத் துதித்தால்தான் நமக்கு நற்கதி என்றுணர்ந்த உயிர், இறைவனை நோக்கிப் போகிறது.

தன்னை நினைக்கத் தொடங்கிவிட்டான்; ஆசை களைக் கட்டறுத்து இல்லறத்திலிருந்தபடியே நம் நினைவில் துதிக்கிறான், கும்பிடுகிறான், ஆடுகிறான், மனத்தை ஒரு நிலைப்படுத்துகிறான், வணங்குகிறான், வாழ்த்துகிறான். கடைசியில் சரணாகதி என இருகைகளையும் தூக்கிவிடுகிறான்.

அப்போது இறைவன் வளைந்து பாதி தூரம் வந்து எதிர்ப்படும் உயிரை அரவணைத்து மோட்சமளிக்கிறான்.

அதையே தான் ஐந்து விரல்களும் காட்டுகின்றன.

ஆள்காட்டி விரல் ஆகிய உயிர் ஆணவம், கன்மம், மாயை என்கிற மும்மலங்களினின்று விடுபட்டு இறைவனாகிய கட்டை விரலை நோக்கிப் போகும்போது கட்டை விரலாகிய இறைவன் தானும் குனிந்து எதிர் கொண்டழைத்து ஏற்கிறான் என்பதே ஐந்து விரல் தத்துவம்.

**மாயை என்றால்**

இதையே விக்ரகங்களில் அபிநயமாக கைகளில் அந்த முத்திரை இருப்பதைக் காணலாம்.

மாயை என்பது ஒரு மயக்கம். அந்த மயக்கத்தைக் கொடுப்பவள் அவளே. போட்ட முடிச்சுக்களை அவிழ்ப்பவளும் அவளே.

மாயையே இல்லையென்றால் மது மயக்கம், மாது மயக்கம் எல்லாம் ஏது?

இந்த மாயையைப் பற்றி ஆதிசங்கரர் 'மாயா பஞ்சகம்' என்ற ஐந்து சுலோகங்களைச் செய்து இருக்கிறார்.

ஆதி சங்கரரே இந்த மயக்கத்திற்கு ஆளாகி இருக்கிறார். எப்படி என்று பார்ப்போமா?

மாயா பஞ்சகம், மனீஷா பஞ்சகம் என்றும் வழங்குகிறது.

**உண்மை வரலாறு**

ஆதி சங்கரர் காசியிலே தங்கியிருந்த போது நடந்த சம்பவம் இது.

படிப்பு முழு மனிதனை உண்டாக்குகிறது, தியானம் மிகச் சிறந்தவனை உண்டாக்குகிறது, பேச்சு சுத்தமானவனை உண்டாக்க வல்லது என்று பெஞ்சமின் பிராங்க்ளின் கூறியுள்ளார்.

இதன்படித் தியானம் பல மகரிஷிகளையும், துறவிகளையும், மகான்களையும், பரமாத்மாக்களையும் உருவாக்கி இருக்கிறது.

சங்கரர் காசியில் தமது மாணவர்களுடன் ஸ்நானம் செய்வதற்காகக் கங்கைக்குச் சென்று கொண்டிருந்தார்.

அப்போது ஒரு முரடன் அழுக்கு ஆடைகள் மற்றும் எண்ணெய் தடவப்படாத பரட்டைத் தலை முடியுடனும் தாடி மீசையுடனும் ஒருகையில் கஞ்சிக் கலயம், மற்றொரு கையில் நீண்ட தடி, கண்களில் ஆங்காரம் கோபம், உடம்பெல்லாம் அழுக்கோடு துர்நாற்றம் இத்துடன் நான்கு நாய்களையும் கூடவே அழைத்துக் கொண்டு சங்கரரின் எதிரே வந்தான்.

தூரத்திலேயே அந்த துர்நாற்றம் வீசும் சண்டாளனைப் பார்த்து அப்படியே பாதையிலே நின்றார் ஆதிசங்கரர்.

அவனும் ஒதுங்கிப் போகாமல் நேரே சங்கரர் மீது இடித்துக் கொண்டு போவது போல் வருகிறான்.

உடனே அதிர்ச்சியுற்று அசூயைப்பட்ட சங்கரர், "ஒதுங்கிப்போடா! சண்டாளா! போ- போ- ஒதுங்கிப் போ" என்றார், அத்வைத மதத்தைக் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர்வரை பரப்பப் பாடுபட்ட ஆதிசங்கரர்.

உடனே நின்றுவிட்ட சண்டாளன் கேட்டான்.

**ஆத்மாவையா? உடலையா?**

"ஐயா! ஒதுங்கிப்போ என்று சொன்னீர்களே? எதை ஒதுங்கிப் போகச் சொன்னீங்க? சாப்பாட்டால் உருவான இந்த உடம்பை, அதே சாப்பாட்டு உடம்பிலிருந்து ஒதுங்கிப் போகச் சொல்கிறீங்களா?-

அல்லது,

இந்த ஜடம் மாதிரி உடம்பை இயக்கக்கூடிய மெய்ஞானமயமான ஆத்மாவை, இன்னொரு ஆத்மாவுக்கு வெகு தூரத்துக்குப் போகச் சொல்றீங்களா?

இந்த உடம்பைத்தான் சொல்றதா இருந்தா, உங்க உடம்பும் சோத்தால் அடிச்ச பிண்டம்தான். என் உடம்பும் சோத்துப் பிண்டம்தான். வெறும் ஜடம்தான்.

இதுல ஒண்ணும் வித்தியாசம் பார்க்கவேண்டியதே யில்ல.

ரெண்டும் ஒண்ணுதான்.

ஆத்மா என்பது ஒரே பொருள் என்பது சைவசித்தாந்தம். அந்த ஆத்மா எங்கும் பரவி உள்ள ஒரே பொருள் அல்லவா?

ஆத்மாவை ஆத்மாகிட்டேயிருந்து விலகிப் போகச் சொல்றீங்களா?

எதை எதுலேருந்து விலகச் சொல்றீங்க?!" என்றான். மேலும்,

"ஏனையா!... இப்படிப் பாக்கறீங்க? ஆகாயத்துல சஞ்சரிக்கிற சூரியனுடைய வடிவம் அதாவது பிம்பம் சாக்கடைத் தண்ணியிலே தெரிந்தாலும் கங்கை ஆத்து நீரிலே தெரிந்தாலும் ரெண்டுக்கும் வித்தியாசம் இருக்கா?

**மேலும் உயர்ந்தான்**

இன்னொரு உதாரணம் சொல்றேன் கேளுங்க. மண்குடம் - பித்தளைக் குடம் இருக்கு. ரெண்டிலேயும் ஆகாயவெளி ஒரே மாதிரியாத்தான் தெரியும்.

உங்களைப் பார்த்தா துறவு பூண்டிருக்கிற சந்நியாசியா தோணுது எனக்கு. காவி கட்டிகிட்டு உத்திராட்சமாலை போட்டுக்கிட்டு நெத்தியில பட்டையா விபூதிய பூசியிருக்கீங்க. அதனால் உங்களுக்கு இதெல்லாம் தெரியும்னு எனக்கு தோணல்ல.

அமைதியான மெய்ஞானக் கடலில் முத்துக் குளிக்கிற வனுக்குப் பிராமணன் சண்டாளன் என்ற வித்தியாசம் உண்டா?

சந்நியாசியா இருக்கிற நீங்க அதுக்கேத்த குணாதிசயத்தோடு பிரகாசிக்கலியே!

அழிவில்லாத ஆத்ம தத்துவத்தை உணர்ந்தவர் போலத் தெரியறீங்க. ஆனா சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தம் இல்லாத மாதிரியே நீங்க இருக்கீங்க.

அப்பப்ப அழியப் போற உடம்பைப் பார்த்து எப்படி நிலையான வஸ்துண்ணு நினைச்சுப் பேசறீங்க?

என்னைப் பார்த்து 'சீச்சி விலகிப் போ'ன்னு சொல்றது உலக ஆசாரப்படி சரியாயிருக்கலாம். ஆனா- அத்வைத மதத்துக்கு எதிரிடையா இல்ல இருக்கு?" என்றான் அந்தச் சண்டாளன்.

ஆபாசம் மிகுந்த வெறிநாய்களையும் சொறிநாய்களை யும் பிடித்துக் கொண்டு வரும் சண்டாளன் தத்துவார்த்தமான உண்மை பேசும்போது கஷ்டமாகத் தான் இருந்தது.

சண்டாளனைப் பார்த்து "நீயா தத்துவம் பேசற?" என்று ஆச்சர்யப்பட்டார் சங்கரர்.

**சண்டாளனல்ல... மகான்தான்!**

"ஆமாம்! இப்படிப்பட்ட கீழ்மகன், உயர்ந்த மெய்ஞானத்தை எப்படிப் பிட்டு பிட்டு வைக்கிறான்! இது எப்படி சாத்தியமாயிற்று, இறைவா? நீதான் என்னைக் காக்க வேண்டும்" எனக் கண்களை மூடித் தியானம் செய்தார் ஆதிசங்கரர்.

இப்போது புரிந்து விட்டது சங்கரருக்கு வந்திருப்பவன் சண்டாளனில்லை, உண்மையான ஞானியே என்று. இல்லையென்றால் இப்படிப் பேசமுடியுமா?

சத்தியத்துக்கும், நேர்மைக்கும், மனத்தூய்மைக்கும் உறைவிடமான சங்கரரே ஆச்சர்யப்பட்டார்!

"ஏ மனிதா! பார்க்கறத்துக்கு நீ சண்டாளனாய்த் தெரியற. இந்நேரம் நீ சொன்ன தத்துவமெல்லாம்

உண்மைதான். உன்னை சாதாரணமானவன் என்று நினைத்த நான்தான் சாதரணமான சாமான்யன்.

நீ சத்தியமா சண்டாளனில்ல. உலகத்துல தத்துவங்களையும் இதிகாசங்களையும் படிக்கிறாங்க, தியானம் பக்தி இதுல ஆழ்ந்து போறாங்க. ஆனா கொறஞ்சபட்சமுள்ளவங்க தான் இம்மாதிரி பேதங்காட்றத எதிர்த்திருக்காங்க.

உன்னைப் போல துர்நாற்றம் வீசற புலையனாயிருந்தாலும், பிறவி பிராமணனாயிருந்தாலும் சண்டாளனாயிருந்தாலும் வணக்கத்துக்குரியவங்களா யிடறீங்க.

ஆக நான் உன்னை சாமான்யமான சாதாரண ஆளா நினைக்கல்ல. மெய்ஞானமுணர்ந்த ஞானியாகவே கருதறேன்" என்று ஆதிசங்கரர் ஐந்து சுலோகங்களைப் பாடினார்.

அது மனிஷா பஞ்சகம் என்ற பெயரில் புகழ் பெற்றுள்ளது.

**சுலோகம் பாடினார்**

விழிப்பு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று நிலைகளிலும் உண்டாகும் அனுபவங்களை சைதன்யமயமாகிய ஆத்மா ஸாக்ஷி போல் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அந்த மெய்யுணர்வேயாகிய பரப்பிரம்மம்தான் நான்முகன் முதல் எறும்பு ஈராக உள்ள ஜீவன்களுக்குள் அந்தர்யாமியாக இருந்துகொண்டு அவற்றின் உடல்களை உயிருள்ளவை போல் செயற்படச் செய்கிறது.

அதுதான் இந்த உலகத்தார்களுக்கும் எடுத்துக் காட்டாயிருக்கிறது.

அந்த மெய்ப்பொருள்தான் நான். உடல் மனம் போன்ற பார்க்கப்படும் எல்லாப் பொருள்களுக்கும்

அப்பாற்பட்டவன் நான் என்ற ஞானம் பெற்றவன் ஜாதி, மதம், குலம், ஆச்ரமம் என்ற வேறுபாடுகளை முற்றிலும் களைந்தவன்.

இது, முதல் சுலோகத்தின் கருத்து.

நான் பரப்பிரம்மமே! இந்த உலகம் உள்ளத்தால் உற்பவிக்கப்பட்ட கற்பிக்கப்பட்ட தோற்றமேயன்றி வேறில்லை.

அஞ்ஞானத்தாலும், மூன்று குணங்களின் தூண்டுதலி னாலும் விதவிதமாகத் தோற்றமளிக்கிறது.

வெறும் பெயரும் உருவமும் கொண்டது. நாமரூபங்களை அகற்றிவிட்டு நோக்குகையில் பிரம்மமே ஆதாரம் எனத் தோன்றும். இந்த உண்மையுணர்ந்து எவனொருவனின் புத்தியானது ஆனந்தமயமானதும் என்றும் நிலைத்துள்ளதும் தூய்மையானதுமான பரப்பிரம்மத்தில் லயிக்கிறதோ அவனுக்கு வேத போதனை சிறிதும் இருக்காது. அவன் யாராயிருந்தாலும் சரி அவன் என் குருவேதான்.

இது, இரண்டாவது சுலோகத்தின் கருத்து.

எவனொருவன் குருவின் உபதேசங்களைக் கேட்டு விசாரம் செய்து தியானமும் செய்து, 'இந்த உலகம் அழிவுள்ளது. அதனால் நித்யமான ஆத்மா கொஞ்சம் கூடப் பாதிக்கப்படுவதில்லை' என்ற உணர்வினால் மனத்தை பிரம்மத்திலேயே நிலை நிறுத்தி மிகவும் சாந்தமாக இருக்கிறானோ அவனுடைய கர்மபலன் களெல்லாம் தூய மெய்ஞானமாகிய நெருப்பில் எரிக்கப்பட்டு விடுகின்றன.

பிராரப்தத்தால் சரீரத்தை இன்னும் சில காலம் வைத்துக்கொண்டிருக்க நேரிட்டாலும் உலக விவகாரங் களால் ஒருவித கர்ம பலனும் அவனைப் பாதிக்காது.

ஆகையால் அவன் தனது உடலை பிராரப்தத்திற்கே அர்ப்பணம் செய்தவனாகிறான். அமைதியுடன் வாழ்கிறான். அப்பேர்ப்பட்டவன் என் குருவே.

பிராரப்தம் என்பது செய்வினைப் பயன்களைக் கொடுக்க ஆரம்பித்த கர்மபலன்கள். அவற்றை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

ஆனால் பிரம்மத்தில் லயித்த ஞானிக்கு பிராரப்த கர்மாவினால் ஒருவித துன்பமும் இன்பமும் கிடையாது. அவன் சமநிலையிலிருப்பான். அவன் தனது சரீரத்தைப் பிராரப்தத்துக்கு அர்ப்பணம் செய்துவிட்டுச் சும்மா இருப்பான். இத்தகைய திவ்ய அனுபவமுள்ளவன் ஜாதி, குலம் எதுவும் விசாரிக்கப்படாமல் பிரம்மமே என்று போற்றப்படுவான். இதைத்தான் மூன்றாவது சுலோகத்தில் ஆதி சங்கரர் குறிப்பிடுகிறார்.

அடுத்து "நான்" "நான்" என்று அறியப்படுவதைக் குறிப்பிடுகின்றார்.

எந்த ஆத்மா சைதன்யமானது எல்லா ஜீவன்களையும் தேவதைகளையும் அந்தக்கரணத்தில் பிரகாசித்துக் கொண்டு அதன் பிரதிபிம்பத்தால் ஜடமான உடல் முதலிய கரணங்களை இயங்கச் செய்து ஆட்டுவிக்கிறதோ அந்த ஆத்மாவே நான் என்று எவன் மனதைக் கட்டுப்படுத்தித் தியானத்தால் அறிகிறானோ அவனே என் குரு என்கிறார்.

தியானத்தில் அமர்ந்து உண்மையை அனுபவிக்கும் ஞானிக்கு, நான் என்பது எதைக்குறிக்கிறது என்ற உணர்வு நேர்முக அனுபவமாய் சித்திக்கிறது. ஆகையால் பிரம்மபாவனை பூண்டவனாய் பேதங்களை அவன் முற்றிலும் துறந்தவனாகிறான். இப்பேர்ப்பட்டவன் யாராயிருந்தாலும் அவனே என் குரு என்கிறார்.

கடைசி சுலோகத்தில்,

இம்மாதிரி தூய சைதன்யமயமான பிரம்மானந்தக் கடலில் மூழ்கிய மனமும் நிம்மதியும், சாந்தமும் கூடியிருக்கும் ஞானியை, அந்த ஆனந்தக் கடலின் ஒரு திவலையும் தங்களை இன்பப்படுத்தப் போதுமானது என்ற எண்ணம் கொண்ட இந்திரன் போன்றவர்கள் அடிபணிந்து வணங்குகிறார்கள். அத்தகைய ஞானிகள் பிரம்மத்தை உணர்ந்தவர்கள் மட்டுமல்ல; பிரம்மமேயாகி வாழ்கிறார்கள்.

இப்படி ஆதிசங்கரர் சுலோகங்களைப் பாடி முடித்ததும் எதிரிலே வந்திருப்பவர் ஒரு பெரிய மகானேயன்றிச் சண்டாளனல்லன், புலையனல்லன், துர்நாற்ற அசிங்கமானவனுமல்லன். பிரம்மமே சண்டாள வடிவில் வந்து நமது மாயையைப் போக்க வந்திருக்கிறது, என்று உணர்ந்தார்.

**பேரொளி பூத்தது**

உணர்ந்த மாத்திரத்திலேயே சண்டாளன் உடனே மறைந்தான். ஒரு பேரொளிப் பிழம்பு ஜொலித்தது. அதனுள் ரிஷபவாகனாரூடராய், சடாமுடியும், பாம்பாரமும், புலித்தோலும், நெற்றிக் கண்ணும், முடியில் கங்கையும், பிறையும், கையில் சூலமும் உடுக்கையும் ஏந்திய மகேச்வரனான சிவபெருமான் தோன்றிப் புன்னகை பூத்து நின்றார்.

ஆதிசங்கரரால் ஒன்றுமே பேசமுடியவில்லை.

தன்னையறியாமல் தரையில் வீழ்ந்து வணங்கி எழுந்து, "பரம்பொருளே! பிரம்மமே! பிரம்மத்தின் மூலாதாரமே, மகேஸ்வரியின் கணவனே! சக்தியின் பிரதிபிம்பமே! ச்ர்வேஸ்வரா! அகில அண்டத்துக்கும் நாயகா! இந்த உடலைப்பற்றி நான் சிந்திக்கும்போது, நான் உன் சேவகன். ஜீவனைப் பற்றி நினைக்கும்போது உமது அம்சமாகவே நீயே நானாகி நிற்கிறேன்.

ஆத்ம சைதன்யத்திலேயே லயித்திருக்கும்போது, நான் நீயே தான்.

இது தான் தத்துவம், அத்வைத மதத்தின் அடிப்படைசாரமே.

இதை அறிந்தவன் எல்லாவித அஞ்ஞானத்தையும் கடந்தவனாகிறான். இந்த நிலையை அடைவதற்குத்தான் ரிஷிகளும் முனிவர்களும் தனிமையில் இருந்து அப்பியாசம் செய்கிறார்கள்.

சர்வேச்வரா! நீ உபதேசித்தவைதானே நான் அன்றாடம் உணர்வது.

**குருவில்லாமல் உயர்வு ஏது?**

குருவே! முனிவர் நால்வர்க்கு உபதேசிக்க குருவாய், தட்சணாமூர்த்தியாய் தெற்கு நோக்கிக் கல்லால மரத்தின் கீழ் அமர்ந்தாயே, அந்தக் காட்சியை நான் மனத்தில் இருத்திப் பார்க்கும்போது எனக்குப் புரிகிறது ஒன்றேயொன்று.

குரு இல்லையேல் அருள் இல்லை. அருள் இல்லையேல் சாஸ்திரங்கள் பயனற்றவையாகிவிடும். அருள் எப்படி வரும்? உள்ளத்தில் விழிப்பு வேண்டும், தனித்திரு, பசித்திரு, விழித்திரு என்பதுதானே அரிச்சுவடி? உள்ளத்தில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டால் தான் ஞானம் சித்திக்கும். அந்த உண்மையின் சொரூபமான உன்னை வணங்குகிறேன்- என்னை அருள் கனிந்து அருள் மழையில் நனைப்பீர் என்று.

கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க மறுபடியும் திருவடித் தாமரைகளைப் பற்றினார்.

மாயை விலகியது. சண்டாளன் - நல்லவன் - பிராமணன் - புலையன் - தீயது - கெட்டது என்பன

போன்ற பேதங்களை உருவாக்கும் மாயை என்னை விட்டு அகன்று விட்டது என்றார்.

**ஆசிபெற்றார் ஆதிசங்கரர்**

முக்கண்ணன் அருளாசி வழங்கி "சங்கரா? எல்லாம் மாயையின் வேலைகள். நீ போகும் பாதையில் மாயை அவ்வப்போது குறுக்கிடுவாள். அதை முறியடித்து முன்னேறு. என் ஆசி எப்போதும் உண்டு.

மாயை குறுக்கிடுவதால் உன் புகழ் மேலும் மேலும் பெருகும்" என்று மறைந்தார்.

'பிரச்னைகள் மகான்களையும் உறுதிமிக்க சாதனைகளையும் உருவாக்குகின்றன' என்றார் கென்னடி.

இதைப் போலவே மாயையால் மாந்தர் படும் அல்லல் பற்றிப் பகவான் ராமகிருஷ்ண பரமஹம்சர் வாழ்நாளில் நடந்த சிறு சம்பவத்தைக் கூறுகிறேன்.

**இதுதான் இன்பமா?**

ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சர் சீடர் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தார்.

அந்தச் சீடர் திருமணமானவர். குழந்தைகள் இருக்கின்றன. இருந்தும் அவர் மனைவி தெய்வ வழிபாட்டில் கலந்திருந்தபோது, அவளுடன் போய்ப் பேசிக் கொண்டிருப்பதை ராமகிருஷ்ணர் பார்த்து விட்டுத்தான் அழைத்தார்.

"உனக்கு வெட்கமாயில்லை? குழந்தைகள் இருக்கின்றன. ஆனாலும் மனைவியுடன் கூடுகிறாய். இதில் இன்னும் உனக்கு வெறுப்பே ஏற்படவில்லையா?

ஏன் இந்த மிருகத்தனமான வாழ்க்கை? நரம்பு, ரத்தம், மலம், மூத்திரம் ஆகிய இவை உன்னை வெறுப்படையச் செய்யவில்லையா?

எவன் இறைவனது பாதத்தாமரைகளை இடைவிடாமல் தொடர்ந்து நினைக்கிறானோ அவனுக்கு மிகவும் அழகான பெண்ணும் சுடுகாட்டுச் சாம்பலுக்குச் சமம்.

எந்த உடல் நிலையற்றதோ, எதற்குள் கிருமிகள், குடல்கள், ரத்தம், சதை, எலும்பு போன்ற தூய்மையற்ற பொருள்கள் இருக்கின்றனவோ அந்த உடலிலா நீ ஆனந்தம் காண்கிறாய்? என்ன வெட்கக் கேடு!

சீடனே! பகவானுடைய அன்பில் ஒரு துளியையாவது ஒருவன் பெறுவானானால் அவனுக்குப் பெண்ணும், பொன்னும் மிகமிகத் துச்சமானவையாக ஆகிவிடுகின்றன. கற்கண்டு பானம் கிடைத்தால் வெல்ல பானம் அற்பமானதாகத் தோன்றுகிறது. இறைவனிடம் உள்ளம் உருகிப் பிரார்த்தனை செய்தால், அவனது பெயரையும் புகழையும் எப்பொழுதும் விடாமல் பாடினால் நாளடைவில் அந்த அன்பு உண்டாகும்" என்கிறார்.

இதிலிருந்து நமக்குப் புலப்படுவது அன்னை மாயையாகி மனிதர்களை மயங்க வைக்கிறாள். அதற்குத்தான் ஞானிகளும், முனிவர்களும், மகான்களும் அவ்வப்போது தோன்றி அறிவுரைகள் கூறி மக்களை நல்வழிப்படுத்த முயல்கிறார்கள்.

மாயை எனும்போது இன்னொரு மாயா நினைவுக்கு வருகிறது.

**குமரியில் மாயி**

கோவாவைச் சேர்ந்த ஓர் அம்மையார், சுமார் நாற்பது ஆண்டுகளுக்குக் குமரியிலே வாழ்ந்த பரதவர் என்கிற மீன்பிடிப்பவர்கள் வசிக்கும் நகரத்தில் வசித்து வந்தார்.

அங்குள்ள மக்கள் 'மாயி' என்றும் 'மாயம்மா' என்றும் அன்போடு அழைத்தார்கள். கொஞ்ச நாள் இருந்து அந்நகரத்தை நீக்கி இடம் மாறினார்.

குமரி முனையிலே குமரிக் கோயிலின் பின் பக்கமுள்ள பரசுராமபிள்ளையார் கோயிலின் பக்கமுள்ள கடற்கரையில் தங்கினார்.

மாயித் தாய் நிறைய விரதங்கள் இருப்பார். ஒரு வேளை தான் உணவு உண்ணுவார். எந்த நேரமும் கோயிலைச் சுற்றி வருவார். தியானம் செய்வார். எப்போதும் திரிந்து கொண்டே மனம் போனவாறு போவார்.

மாயி நாலைந்து நாய்களை வளர்த்தார். மக்களிடம் கிடைக்கும் உணவை நாய்களிடம் போடுவார், தானும் சாப்பிடுவார்.

நாய் நன்றியுள்ள பிராணி என்பதாலும் சாஸ்தாவின் படைப்பிலே நாயும் ஓர் அங்கம் வகிப்பதாலும் நாயை வளர்த்தாராம்.

இப்படியே இருக்கும்போது உணவு பற்றி அக்கறையோ உடை, படுக்கை, உறக்கம் போன்ற எந்தச் செயலிலும் நாட்டமில்லாமல் இருந்ததைப் பார்க்கும் போது சித்தர்களின் மேல் நிலையை அடைந்தார்.

**சித்து விளையாட்டு**

அதாவது குமரித்தெய்வத்தின் பேரருளால் ஞானம் வரப்பெற்றார்.

ஞானம் வரப்பெற்றதால் விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் தனித்து விளங்கினார்.

தெருக்களில் கிடக்கும் குப்பைக் கூளங்களைத் திரட்டி ஓம குண்டம் வளர்ப்பார். கடலில் வெகு தூரம் நீந்திப் போவார்.

தெருவில் நடப்பார். கடைத்தெருவுக்கு போவார். ஏதாவது ஒரு கடையில் போய் கைவைத்து முன்னே உள்ள

பொருள்களை கையில் அள்ளுவார். அப்படியே போட்டுவிட்டுப் போய் விடுவார்.

அன்றைக்கு அந்தக் கடையில் வியாபாரம் அதிக மாகும். ஆகவே நம் கடைக்கு வரமாட்டாரா தெய்வத்தாய் மாயி என்று கடைக்காரர்கள் ஏங்குவார்கள். வீடுகளில் உணவு கொடுப்பதைச் சில இடங்களில் வாங்குவார். சில வீடுகளில் மறுப்பார். வாங்கிப் போன உணவை நாய்க்குப் போடுவார், தானும் உண்ணுவார்.

எதிரே மக்கள் யாராவது நின்றால் எச்சில்பட்ட சோற்றைத் தருவார்.

அன்னை மாயியின் எச்சில்பட்ட சோற்றைத் தேவாமிர்தமாக நினைத்து மக்கள் சாப்பிடுவார்கள்.

பதினெட்டு சித்தர்களில் ஒருவராய் இருப்பாரோ?! என அறிஞர்கள் சிந்தித்தனர். இப்படி மாயி மாயையாயி அன்னையின் உருவாக வாழ்ந்து நிறைய பக்தர்களுக்குப் பல நோய்களையும் தீர்த்து அருள் பாலித்தாள்.



# ஆங்காரியும் அவளே

மாயையும் அவளே என்பது பற்றிக் கண்டோம். உலகின் உயிர்களை ஆட்டுவிப்பவளே மாயையான அன்னை மகாசக்தி தான்.

ஆங்காரியாகவும் ஓங்காரியாகவும் அன்னையிருக் கிறாள்.

ஆங்காரம், அகங்காரம் என்பதேயாகும். அகம்பாவத்தை அழிப்பவள் அவளே ஆங்காரி.

சாந்த வடிவினளான அன்னை ஆதிபராசக்தி ஆங்காரியாகவும் ஆங்கார குணமுடையவளாகவும் வக்ர தேவதையாகக் காட்சி தருகிறாள்.

**உதாரணமாக ஒரு வரலாறு**

காளி, பகவதி, வராகி, துர்க்கா வரிசையில் ஆங்கார நாயகியாய்க் கருமாரியும் சேர்க்கப்படுகிறாள்.

மாயையும் கருமாரியே

ஆங்காரியும் கருமாரியே

சாந்தசொரூபியான சாதாரணமாரி.

சோனிதபுரம் என்ற நாட்டை கசிய பிரஜாபதி என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் அரக்க குணம் படைத்த அரக்க வம்சத்தைச் சேர்ந்தவன்.

இவனுக்குப் பல பிள்ளைகள். அவர்களுள் பாணாசுரன் என்பவனும் ஒருவன்.

இவன் அரக்க மனம் படைத்தவன். இரக்கமில்லாதவன். இமயத்தைப் போன்று தலைநிமிர்ந்து மூவுலகங்களையும் ஆள ஆசைப்பட்டான்.

அதற்காகக் காட்டிற்குப் போய், நான்முகனை நோக்கித் தவமிருந்தான். கடுமையான தவம். நான்முகன் அவன் முன் தோன்றி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

"படைப்புக் கர்த்தாவே! நான் ஆயுதங்களாலும், எந்த உயிர்களாலும், யாராலும் மரணம் அமையக்கூடாது" என்று வரம் கேட்டான்!

நான்முகனும் வழங்கினார்.

வரம் பெற்ற பாணாசுரன் திக்விஜயம் செய்து தேவர்களை இம்சித்தான். மும்மூர்த்திகளின் சத்தியலோகம், வைகுண்டம், கயிலாயம் வரை போய் விட்டான்.

ஆகவே தேவர்கள் மும்மூர்த்திகளிடம் போயினர். மகாவிஷ்ணு, பிரம்மா கூடி சிவனிடம் ஆலோசனை செய்தார்கள்.

பிரம்மா தான் வரம் கொடுத்தது பற்றிக் கூறினார். அதில் பெண்ணால் இறக்கக் கூடாது என்ற விதி விலக்கு இல்லை என்பதை நாரதர் நினைவு படுத்தினார்.

ஆகவே பாணாசூரனைக் கொல்ல பராசக்திதான் பொருத்தமானவள் என்று கண்டார்கள்.

**பராசக்தியின் நோக்கு**

உடனே தேவர்களை விட்டு யாகம் வளர்த்தச் சொன்னார் சிவபெருமான்.

அந்த யாகத்திலே அன்னை பராசக்தி ஒளிவடிவத்தில் குழந்தையாக வடிவுக்கரசியாய் உற்பவித்தாள்.

அந்தக் குழந்தை பூலோகத்தில் பாரத கண்டத்தில் தெற்கு முனையில் போய் சேர்ந்தது. அங்கேயே வளர்ந்து கன்னிப் பெண் ஆனாள்.

பார்ப்பவர் போற்றும் அழகு. பாணாசுரனை வதைக்க வந்தவளாயிற்றே! கன்னிப் பெண்ணாக இருக்கும்போது அவளுக்குத் திருமணம் செய்ய வேண்டுமென அவளை வளர்த்த மன்னன் விரும்பினான். குமரிக்கு அடுத்த சுசீந்திரத்தில் தாணுமாலயன் குமரியை மணக்க விரும்பினான்.

உடனேயே திருமணத்திற்கு ஏற்பாடாயிற்று.

**இதிலேயும் ஒரு சிக்கல்**

கன்னி சக்தியின் சார்பில் மாப்பிள்ளையாக நிச்சயிக்கப்பட்ட தாணுமாலயனிடம் காம்பு இல்லாத வெற்றிலை, கணுவில்லாத கரும்பு, கண்ணில்லாத தேங்காய் இவைகளை சீர்வரிசையாக எடுத்துக் கொண்டு மாப்பிள்ளை விடியற்காலை முகூர்த்தத்திற்கு வந்து விடவேண்டுமென்று பேசி முடித்தாயிற்று.

விடியற்காலை திருமணம். விடிவதற்குள் மாப்பிள்ளை வந்தாக வேண்டும். விடிந்துவிட்டால் திருமணம் கிடையாது என்ற நிபந்தனைக்கு மாப்பிள்ளை கட்டுப்பட்டார்.

தேவர்கள் பார்த்தார்கள். கன்னியாக இருக்கும் குமரியான சக்திக்குத் திருமணமாகிவிட்டால், பாணாசுரனை சம்ஹாரிக்க முடியாதே! காரணம் கன்னிப் பெண்ணால்தான் அவனை மாய்க்க முடியும். இது அவன் பெற்ற வரம்.

பாணாசுரனை மாய்க்க வென்றே அவதரித்த குமரி, எடுத்த அவதாரத்தை முடிக்க வேண்டாமா?

**கொக்கரக்கோ சேவல்**

அதற்கு நாரதரை உருவாக்கினார்கள்.

மாப்பிள்ளை தாணுமாலயன் சுசீந்திரத்திலிருந்து புறப்பட்டார் குமரி முனையை நோக்கி.

எட்டுமைல் தூரமல்லவா? நடந்துதானே வரவேண்டும்!

நாரதர் கோழிவடிவெடுத்துக் கொக்கரக்கோ எனக் கூவினார்.

'ஓ! பொழுது புலர்ந்துவிட்டது என மணவாளனாக வந்த தாணுமாலயன் அப்படியே திரும்பி சுசீந்திரமே போய்விட்டார்!

மணப்பெண்ணாக அலங்காரம் செய்து கொண்டு காத்திருந்த மணப்பெண் கன்னியாகுமரி, கோபப்பட்டு திருமணமே வேண்டாமென்று கன்னியாகவே தவமியற்றத் தொடங்கினாள்.

**மதி மயங்கியது**

கோழி கூவிய இடம் வழுக்கம் பாறை எனப்படும்.

இப்படிக் கன்னியாகுமரியாய் உமாபிராட்டித் தவம் செய்யும் போது பாணாசுரனின் ஒற்றர்கள் குமரி முனைப்பக்கம் வந்தவர்கள் அழகியான குமரியைப் பார்த்துவிட்டார்கள்.

ஆஹா! என்ன அழகு!

இவளை நமது மன்னர் பாணாசுரனுக்கு மண முடித்தால்?

சிந்தனை வயப்பட்டவர்கள் சீண்டிவிட்டு விட்டார்கள் பாணாசுரனை. பாணாசுரன் வந்து நேரில் தவம் செய்யும் சக்தி குமரிப் பெண்ணைப் பார்த்தான். அதி அற்புத அழகி எனக் கண்டான்.

அவளை நெருங்கி அடாத மொழி பேசித் தன்னை மணந்து கொள்ளும்படி கேட்டான்.

முறையற்ற பேச்சைக் கேட்ட சக்தி, "அடா! மூட அரக்கனே! என்னை நீ மணக்க முடியுமா? இருவரும் போரிடுவோம். பிறகு பேசலாம் அதைத் தவிர வேறு வழியில்லை" என்றாள். அரக்கனும் போர் செய்ய ஆயத்தமானான்.

உடனே கன்னி சக்தி காளியானாள்.

வேம்புலி மீதமர்ந்து கோர வடிவும், கோரைப் பற்களும், கருத்த மேனியும், இருபது கரங்களும் அவற்றில் பலவித ஆயுதங்களுமாய் ஆங்காரியாய் கோபத்தோடு தாக்கினாள். வேம்புலியம்மனாய் வீரபத்திரகாளியாய்த் தாக்கும் தாக்குதலுக்கு ஆற்றாத பாணாசுரன் மாண்டு போனான்.

பாணாசுரனை சக்தி வதை செய்த இடம் வானதிர்த்தம்.

ஆக சக்தி - சிவ சக்தி, போர்க்காலங்களில் காளியாய், வராஹியாய், வைஷ்ணவியாய், வேம்புலியம்மனாய், துர்க்கையாய், சக்ர தேவியாக மாறி அசுரர்களை அழித்திருக்கிறாள்.

அந்த சக்ர சக்தியே கருமாரியுமாகிறாள்.

**மனோகரியின் தவம்**

தாருகாசுரனுடைய மனைவி இமய மலைச்சாரலிலே கடும் தவம்புரிந்து கொண்டிருந்தாள், சிவபெருமானை நோக்கி. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவம் செய்யும்

அவளுக்கு, அனுதாபப்பட்டுச் சிவசக்தி அருள்புரிய மனமில்லாமல் பிரசன்னமாகாமலேயிருந்தார்.

ஆதிசக்தி உமையவளோ,

"சுவாமி ! ஏன் உங்களுக்கு மனம் இப்படி இரும்பு போல இருகிப் போகிறது. மனோகரி ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அன்ன ஆகாரமின்றிக் கடுந்தவம் புரிகின்றாள். அவளுக்கு அருள் பாலிக்க ஏன் நீங்கள் முன் வரவில்லை?" என்று கேட்டாள் மனோகரிக்காகப் பரிந்து.

"சக்தி மகேச்வரி! நீ புரியாமல் பேசுகிறாய். மனோகரி யார் தெரியுமா? தாருகாசுரனுடைய மனைவி. அவள் தவம் நல்ல நோக்கத்துக்காக அல்ல. சுயநலத்திற்காக, கணவனுக்கு உதவி செய்வதற்காக. ஆகவேதான் நான் காலங் கடத்துகிறேன் என்றார் சிவபிரான்.

"எப்படி இருந்தாலும் பெண் ஒருத்தி கடுந்தவம் புரிகிறாள். அவளுக்கு அருளுவதுதான் சிறந்தது" என்று பிடிவாதமாய் வற்புறுத்தினாள் சக்தி உண்ணா முலையாள்.

மனோகரியின் தவம், வேகம் அதிகரிக்க அதிகரிக்க சிவசக்திக்கு வியர்த்து விட்டது.

உடனே சிவபெருமான் மனோகரியின் முன் பிரசன்ன மானார்.

"பெண்ணே! என்ன வரம் வேண்டும் கேள்" எனக் கேட்டார்.

கண்ணைத் திறந்தவள் எதிரே நிற்கும் சிவனைப் பார்த்துப் பிரம்மித்து ஏதோ வரம் கேட்டாள்.

**வியர்வை அரும்பியது**

வியர்த்துவிட்ட சிவபெருமான் தன் உடம்பில்

வியர்த்து அரும்பிய வியர்வையை வழித்து ஒரு பாத்திரத்தில் வைத்து அவளிடம் கொடுத்து "நீ என்ன நினைத்து இந்த நீரை யார் மீது சொரிந்தாலும், அது அப்படியே நிறைவேறும்" என்று வரம் கொடுத்து மறைந்துவிட்டார்.

இதே நேரத்தில் சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து உருவான காளி பத்ரகாளியாய் வேம்புலியின் மீதேறி தாருகனை சம்ஹரிக்கச் சென்றவள் தாருகனைக் கொன்று அவன் சிரசை வெட்டிக் கையில் எடுத்துக் கொண்டு வருகிறாள்.

அவளுக்கு எதிரே மனோகரி வந்துவிட்டாள். சிவனிடம் வரம் பெற்றுப் போகும் மனோகரி எதிரே பத்ரகாளி தன் பத்துக்கரங்களில் ஆயுதங்களுடனும் அதில் குறிப்பாக ஒரு கையில் தன் கணவன் தலையுடனும் இருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

கோபம் கொண்ட மனோகரி,

"ஏய்! கோரரூபமுடையவளே! யார் நீ? நீயும் உன் கறுப்பு உடலும் பார்ப்பவர் பயப்படும் கண்களும் பத்துக் கைகளும் ஆயுதங்களும் கோரப் பற்களும் கொண்ட நீ யார்? இது என்ன கையில்?" எனக் கேட்டாள் திடுக்கிட்ட மனோகரி.

"பெண்ணே! நான் ஆதிசக்தியின் அம்சம். பரம்பொருளானவனும் வேதத்திற்கும் முதல்வனுமான சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து உதித்தவள் நான். என் பெயர் பத்ரகாளி. ஆங்காரி ஓங்காரி அனைத்தும் நானே. உலக மக்களுக்கும் தேவர்களுக்கும் தீமைகள் பலபுரிந்த இந்தத் தாருகனோடு போர் புரிந்து தலையைச் சீவி எடுத்து வருகிறேன்" என்றாள். அத்தோடு "நீ யார் இப்படி என்னைப் பார்த்ததும் கோபத்தில்

கண்கள் சிவக்க உதடுகள் துடிக்க உடம்பு ஆட்டமாடி நிற்கிறாயே, ஏன்?" என்று கேட்டாள்.

"நீ கையிலே பிடித்திருக்கிறாயே தலை, அந்தத் தலையின் சொந்தக்காரர் தாருகாசுரனின் மனைவி நான். மனோகரி என் பெயர். என் புருஷன் உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடாது என்ற வரம் பெறத்தான் சிவபெருமானிடம் தவம் இருந்தேன். அதற்குள் நீ காரியத்தை முடித்துவிட்டாய்'', என்று கோபாவேசத்தோடு குவளையிலே வைத்திருக்கிற சிவனின் வியர்வையைக் கையால் அள்ளிக் காளி மீது தெளித்தாள்.

உடனே காளியின் முகம், உடம்பெல்லாம் முத்து முத்தாய் வைசூரி கண்டது. எரிச்சல் தாங்க முடியவில்லை. உடம்பெல்லாம் தீப்பற்றி எரிவது போல் எரிந்தது

"ஓ... சிவசக்தியே! ஆதி சக்தியே! என் உடல் எரிகிறதே" என ஆங்காரத்தோடு கத்தினாள்.

உடனே சிவபிரான் தன் காதிலிருந்து ஒரு அணியை எடுத்துப் போட்டார்.

ஒரு சிவகணம் தோன்றினான். "தந்தையே! எனக்கு ஆணையிடுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்?" எனப் பரிவோடு கேட்டு நின்றான்.

**காளி தேவிக்கு உதவி**

"கந்தகர்ணா! அதோ பார் மனோகரி வீசிய வியர்வையால் பத்ரகாளி முத்துக்கள் வார்க்கப்பெற்று உடல் எரிச்சலில் அவதிப்படுகிறாள். நீ போய் காளிக்கு உதவி, முத்துக்கள் மறைய வழி செய்" என்றார்.

உடனே மறைந்தான் கந்தகர்ணன். பத்ரகாளி இருக்கும் இடத்தில் போய் தோன்றினான். அவன் கையில் வேப்பிலைக் கொத்து இருந்தது.

"தாயே! தந்தை என்னை அனுப்பினார்" என வேப்பிலையால் பத்ரகாளியின் உடல் முழுவதும் தடவி 'மாரிமுத்து தானிறங்கும் மகமாயி மாரிமுத்தே' என்று மந்திரம் ஜபித்தான். அடுத்தகணம் முத்துக்கள் மறைந்தன. எரிச்சல் மட்டும் இருந்தது.

உடனே ஒரு பொய்கையை உண்டாக்கினான். அதிலே பத்ரகாளியை மூழ்கி எழச் செய்தான். உடல் எரிச்சல் அடங்கியது.

உடனே பத்ரகாளி, மனோகரி மீது கோபப்படாமல், "மனோகரி! உன் கோபம் பொருத்தமானதே. உன் கணவன் மீது உள்ள அன்பாலும் பாசத்தாலும் அவன் இறந்து விட்டானே என்ற துக்கத்தாலும் என்மீது கோபங் கொண்டு நீரை என்மீது தெளித்துவிட்டாய். ஆகவே உன் மீது கோபப்படுவதைவிட உன் செயலைப் பாராட்டு கிறேன்" என்று கூறி, "இனி நீ எங்கும் போக வேண்டாம். என் பரிவார தேவதைகளில் ஒருத்தியாக இரு. உன் பெயர் இனி மனோகரியில்லை. இன்று முதல் வைசூரி" என்றாள்.

மனோகரியும் மகிழ்ந்து பரிவாரத்தோடு ஐக்கியமாகிவிட்டாள்.

இப்படி ஆங்காரியும், ஓங்காரியும் காளியாகவும் பத்ரகாளியாகவும் ஆதி சக்தி கருமாரியேயாகிறாள்.

**சதாக்ஷி தேவி**

ஆதிகாலத்தில் துர்முகன் என்றொரு அரக்கன் இருந்தான். அவன் இரணியாட்சதன் வமிசத்தில் குரு என்பவனின் குமாரன்.

இவன் பிறந்ததுமே தேவர்களை எதிரிகளாகவே எண்ணிவிட்டவன். யாரோ ஒரு ஞானி சொன்னது நினைவுக்கு வந்தது அவனுக்கு. தேவர்களுக்குப் பலமான

ஆதாரம் வேதம். அந்த நான்கு வேதங்களை நாசம் செய்ய வேண்டும் என்று எண்ணினான்!

உடனே இமயமலைக்குச் சென்று பிரம்ம தேவனைக் குறித்து ஓராயிரம் ஆண்டுகள் காற்றையே ஆகாரமாக சுவாசித்துக் கடும் தவம் புரிந்தான்.

நான்முகன் அவன் தவத்தை மெச்சி அன்ன வாகனத்தின் மீது ஆரோகணித்து துர்முகன் முன்னே தோன்றினார்.

"துர்முகா! உனக்கு என்ன வரம் வேண்டும் கேள்?" என்றார்.

தியானத்திலிருந்து கண்விழித்து எதிரே அன்ன வாகனத்தின் மீது அமர்ந்து, அன்புடன் தரிசனம் தந்து கொண்டிருக்கும் பிரம்மாவைப் பார்த்து,

"நான்முகனே! மூவுலகத்திலுள்ள தேவர்கள், அந்தணர்கள், ஆகியோரின் வேதமந்திரங்கள் யாவும் என் வசமாகிவிட வேண்டும். எல்லாத் தேவர்களையும் வெல்லும் சக்தியையும் எனக்குத் தரவேண்டும்" என்றான்.

"கேட்டதைக் கொடுத்தேன்" என வரங் கொடுத்து மறைந்தார் பிரும்மா.

**எல்லாம் சூன்யமாயிற்று**

அது முதல் அந்தணர்களுக்கு வேதமே மறந்துவிட்டது. நீராடல், ஜபதபம், சந்தி, ஔபாசனம், சிரார்த்தம், யக்ஞம் முதலியவைகளும் மறைந்து போயின!

வேதங்கள் மறந்து போனதால் அந்தணர்கள், "இதென்ன மாயமாய் இருக்கிறதே! எப்படிப் பிழைப்போம்?" என வருந்தினர்.

யாகம் செய்யாததால், அவிர்ப்பாகம் இல்லையே என தேவர்கள் ஏங்கினர்.

இப்படியிருக்கும்போது துர்முகன் தேவலோகத்தின் மீது படையெடுத்தான். தேவேந்திரன் தேவர்களோடு போர்க்கோலம் பூண்டு துர்முகனை எதிர்த்துப் போராடித் தோற்று, மேரு மலைக்குகைகளில் ஓடி ஒளிந்து கொண்டான்.

தேவர்களும், மற்றவர்களும் தேவி பராசக்தியைத் துதிக்கலானார்கள்.

பூலோகத்தில் பிராமணர்கள் செய்ய வேண்டிய யாகங்கள் செய்யாமற் போனதால் நூறாண்டு காலம் மழை பெய்யவில்லை. மழையில்லாததால் நீர்நிலைகள் வற்றின. பஞ்சம் ஏற்பட்டது. கால்நடைகள் இறந்தன. மக்கள் வேதனைப்பட்டனர்.

"மகேஸ்வரி! அகிலாண்டேஸ்வரி! அன்னை உமையவளே! எங்கள் குறை தீர்த்தருள வா, தாயே" எனப் பலவாறாக தோத்தரித்தார்கள்.

அன்னை கற்பகாம்பாள் கருணையுள்ளத்தோடு நீலமலை போன்ற உடலோடு காந்தி மிக்கப் பொன்னுருவுடனே தோன்றினாள். பொற்றாமரைக் குளத்துப் புதுத் தாமரை மலர் போன்ற மென்மை மனத்தாள் ஆதிசக்தி நாயகி.

வந்தாள், நின்றாள், மக்களின் குறை கண்டாள். நிறை கொண்டாள். தன் அபய கரங்களினின்றும் நீர்த்தாரைகளை வார்த்தாள். மழை பொழிய வைத்தாள். மக்கள் துயர் தீர்க்க முனைந்தாள்.

தேவர்களும் அந்தணர்களும் தேவியிடம் கைகூப்பி வணங்கி வேண்டிக் கொண்டனர்.

**நாயகியை நமஸ்கரித்தனர்**

*சர்வேச்வரியே! சாமுண்டீச்வரி! மாயையால் உலகைப் படைப்பவளே! மனத்தில் மாசினைக் களைபவளே! சகல*

உலகையும் படைப்பவளே! ஆதியே! ஜோதியே! சுடரொளியே! சூட்சம சுந்தரியே!

ஆயிரம், பதினாயிரம் கண்கள் என அருதியிட்டுக் கூற முடியாததால் சதாக்ஷி என்ற பெயருக்குக் கர்த்தாவானாய்.

வேதங்கள் எங்களைவிட்டு விலகின.

ஏன்- வேதங்கள் எங்கே?

உலகம் உய்ய வேதம் வேண்டும் என்றாள். கருணை பாலிப்பதாக கருணை கூர்ந்தாள்.

இது விஷயம் துர்முகனுக்குத் தெரிந்தது அவன் பெரும் படையுடன் வந்து தேவர்களையும் அந்தணர்களையும் அடித்து விரட்டினான்.

அம்மா! அபயம்! எனத் தஞ்சம் புகுந்தனர்.

ஆதிசக்தி நாயகி தன் சங்கை எடுத்து ஊதி சங்க நாதம் செய்தாள். தன் சக்ராயுதத்தை நான்கு புறமும் சுழன்று வரும்படி ஏவினாள்.

போருக்குத் தயாரானாள்.

தேவியின் திருமேனியிலிருந்து காளிகா, தாரிணீ, பாலா, திரிபுரை, பைரவி, மாதங்கி, திரிபுரசுந்தரி, காமாக்ஷி, துலாஜா, தேவி, ஜம்பினி, மோஹினி, சின்ன மஸ்தை, குஹ்யகாளி, காளி, முதலான முப்பத்திரண்டு சக்திகள் தோன்றின.

அறுபத்தாறு சக்திகளோடும் அளவற்ற ஆயுதங் களோடும் தோன்றிய அச்சக்திகளோடு துர்முகன் பத்து நாள் சண்டை இட்டான். துர்முகனோடு பயங்கர ஆயுதங்களோடு சதாக்ஷிதேவி நேருக்கு நேர் சண்டை இட்டாள்.

சதாக்ஷி தேவி அசுரரின் மீது நச்சு பாணங்களை ஏவினாள். ரதத்தை அழித்தாள். குதிரைகளை மாய்த்தாள். அவன் மீது மார்பிலும், கழுத்திலும், தோளிலும் சரமாரியாக அம்புகளைப் பொழிந்தாள்.

துர்முகாசுரன் இரத்தம் கக்கிக் கொண்டு தேவியின் காலடியில் விழுந்தான். அவனது உடலிலிருந்து ஓர் ஒளி தோன்றித் தேவியின் திருமேனியில் கலந்து மறைந்தது. தேவர்களும் பிரம்மாவும், விஷ்ணுவும் அம்பாளை வணங்கினர்.

தேவி சதாக்ஷிதேவி வேதங்களை அந்தணர்களிடம் ஒப்படைத்தாள். அனைவரும் ஆங்காரியான அன்னை சதாக்ஷி என்கிற ஆதி சக்தி நாயகியைப் போற்றினார்கள். ஆகவே துஷ்டர்களை நிக்ரகம் செய்வதற்கு அன்னை பராசக்தி ஆங்காரி ஆகிறாள். அவளே கருமாரியும் ஆகிறாள்.



# சாந்த சொரூபிணி

*உக்ரமான தேவியே உக்ரம் தணிந்து சாந்தம் ஆகிறாள்.*

கோபக் கனல் தணிந்திடவே
குளிர் பார்வை பார்த்துவிட
தாபக்கனல் தணிந்திடவே
தாய்மைப் போர்வை போர்த்திவிட

*என்றும்,*

கருணை முகம் தவழ்ந்து வரக்
காப்பவள் நீலி உன் கையிலே வேப்பிலையாட
தருணமிது தேவிநீ சாந்த சொரூபிணியாய்
தவழ்ந்துமே பனிமலர்போல்
குளிர்ந்திடு மனமெலாம் கோபத்தை மறந்திட்டுக்
குணக்குன்றாய் மிளிர்ந்திடம்மா
தளிர்க்கின்ற பூஞ்செடிக்குத் தண்ணீரை ஊற்றியே
தவவலிமை ஏற்றிடம்மா
கொப்பளிக்கும் கோபத்தில் தகித்திட்ட செவ்வந்தி
மலர்முகமே குளிர்ந்திடம்மா

*என்றும் ஆன்றோர்கள் பாடியுள்ளனர். அன்னையின் ஆங்கார சொரூபத்தைச் சாந்த சொரூபிணியாய் அழைத்திருக்கிறார்கள்.*

கல்லென்றுஎண்ணினேன் கனல் எனத் தகித்திட்டாய்
கண்களும் கோவைப் பழமாய்

நில் என்றுசொல்லிட்டேன் நெருப்பென்று நிமலிநீ
 நேத்திரங்கள் மலர்ந்து நின்றாய்
சொல்லொன்று சொன்னாலே சுவையுடன் கேட்டுவிட்டுச்
 சூலிநீ ஆடி வந்தாய்
வில்லொன்று ஏந்தியே வீரநடைபயின்றுமே
 வீராங்கனை ஓடி வந்தாய்.

*என்று சிவசக்தியை ஆங்காரியாக உருவகித்துப் பாடும் போது ஆங்கார சக்தியாய் காணுகின்றோம். பாரதியார் கூட,*

சிவன் கோளம் கண்டு உன்கனல்
 மெய்சினமும் விலகும் கையை
கொஞ்சித் தொடுவாய்
 சாந்தம் கொள்ளுமம்மா சக்தியே மாகாளி
காந்தம் இழுக்குதம்மா கதிரவனின் கிரணம்போல்

*என்றும்*

கோபவிழிப் பார்வையிலே குங்குமக்காரி
 உன்கோவை முகம் சிவக்குதம்மா வேம்புலிக்காரி

*என்றும்*

தாயுமாகி உதவி செய்தாய் தங்கமாகாளி
 நீயுமாகி நிமலியானாய் நீலி ஓங்காரி

*என்றும்*

செக்கச் சிவந்த கண்கள் நெருப்பைக் கக்கி உருட்டுவர்
 கொக்கரிக்கும் ஆணவத்தை மருதைபோல
 உருட்டுவர்

*என்றும்*

மகிஷனை சம்ஹரிக்கக் காளியுமானாய்
 வெம்புலியின் மீதமர்ந்து போர்க்களம் போனாய்

ஆங்கார துர்க்கையாகி வேம்புலியானாய்
அரக்கனை அழித்து ஞானம் அருளி விட்டாய்

என்றும் ஆங்கார சக்தியைப் பற்றி பக்திப்பாடல்களில் காணுகின்றோம். அத்தகைய உக்ர சக்தியைச் சாந்த சொரூபிணியாய் அழைப்பது மரபு.

சக்திக்குக் காந்திமதி என்ற பெயர் உண்டு.

சாந்தமே உருவானவள் என்பது அவளைத்தான்.

தாய்மை மனம் உந்தன்மனம் தவக்கோலம் பூண்டதம்மா
சேய்காக்க விழைவதற்குள் செம்மைமனம் மருண்டதம்மா
போர்க்கோலம் பூண்டுவிட்டாய் பொய்க் கோபம் மாற்றிவிட்டாய்
ஆர்த்தெழுந்த கோபத்தீயில் அழகி என்னை மறந்துவிட்டாய்

என்ற பாடலில் கூட ஆர்த்தெழும் உக்ரசக்தியைப் பற்றித்தான் கூறப்படுகிறது.

சாந்தம் என்பது அமைதி. புயலுக்குப்பின் அமைதி ஏற்படுவது இயற்கை. அது போல் உக்ரத்திற்குப்பின் சாந்த சொரூபம் ஏற்படவேண்டும்.

**இதோ ஒரு உதாரணம்**

ஆக சிவனோடுறையும் சக்திகளனைத்தும் சாந்த சொரூபிணியே. வீரட்டானேஸ்வர். சிவானந்தவல்லி, கபாலீச்வரர் - கற்பகாம்பாள், அண்ணாமலையார் - உண்ணாமுலையாள் இப்படி சிவத்தோடிணைந்திருக்கும் போது சாந்த சொரூபங்கள் தான் இருக்கின்றன.

சக்தி பீடங்களில் இருக்கும் சக்திகள் பெரும்பாலாக் ஆங்கார சக்தியாகவே இருக்கின்றன. சக்திபீடங்களில் தவமிருக்கும் நாயகிகள், குமரியிலே கன்னியாகுமரி, காஞ்சியிலே காமாட்சி, மாங்காட்டில் ஆதி காமாட்சி,

மயிலையிலே கற்பகாம்பாள் இவர்கள் தவமியற்றும் நாயகிகள். இவர்களிடம் தவத்தின் தகிப்பு இருக்கத்தான் செய்யும்.

"நீலத்திரைக்கடல் ஓரத்திலே நின்று -- நித்தம்
தவம் செய்யும் குமரி எல்லை

என்றான் பாரதி. இப்படித் தவம் செய்யும் சக்திகள் உக்ரத்தோடுதான் இருக்கும்.

காஞ்சிகாமாக்ஷி கோயிலில் உக்ரம் தாங்க முடியாமல் ஊர்மக்கள் வேதனைப்படும்போது ஆதி சங்கரர் வந்து யந்திர மேரு அமைத்துச் சாந்தப்படுத்தினார்.

மாங்காட்டிலும் ஆதிசங்கரர்தான் மேரு பர்வத யந்திரம் அமைத்துச் சாந்த சொரூபிணியாக ஆக்கியிருக்கிறார்.

ஆக சாந்த சொரூபிணியாகவும் கருமாரி காட்சி தருகிறாள்.



# திருவேற்காட்டு சக்திபீட மகிமை

திருவேற்காடு சக்தி பீடம். அதற்கு ஒரு மைல் தூரத்தில் சிவன் கோயில் இருக்கிறது.

வேதபுரீச்வரர் - வேற்கண்ணியம்மை

இவர்கள் கருவறையில் உறையும் சிவசக்திக் கடவுளர்கள். திருவேற்காடு வடவேதாரண்யம் எனப் புகழ்பெற்றது. சம்பந்தரால் பாடப்பட்ட திருத்தலம்.

வேதபுரீச்வரர் ஆலயத்திற்குள் ஒரு கிணறு இருக்கிறது, வேலாயுத தீர்த்தம் என்று பெயர். தண்ணீர் வெண்ணிறமாய்ப் பால்கலந்த வெண்மை கலந்திருக்கும். இந்த வேலாயுத தீர்த்தம் மிக சக்தி வாய்ந்தது. இதை பிணியுற்றவர்களுக்கு கொடுத்தால் அப்போதே பிணி விலகும் மகாசக்தியிருக்கிறது.

கலியுகத்தில் கலியின் கொடுமையை நீக்கிக் கருணை நெறியை வளர்க்க அன்னை கருமாரி பல உக்ர வடிவங்களை ஏற்கிறாள். அவளே கருமுத்து மாரி. அவளே சமயபுரத்து மகமாயி. அவளே பாளையத்துப் பெருந்தேவி. படவேட்டியம்மை எனலாம்.

தேவி பாகவதத்திலோ, சிவபுராணத்திலோ, கந்த புராணத்திலோ, விஷ்ணுபுராணத்திலோ எதிலுமே கருமாரி பற்றிப் பெயரே இல்லை.

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு திரு நடேசனார் என்ற மகானின் கனவில் கருநாகமாக வந்த இந்தத் தேவியின் ஆணைப்படியே இக்கோயில் எழுந்ததென்று கூறப்படுகிறது.

இப்போது ராஜ கோபுரத்திற்கு ஈசான திக்கில் காணப்படும் புற்றில் அன்னை கருநாக வடிவில் வாழ்கிறாள் என்று நம்பப்படுகிறது.

**சுவாமி ராமதாசர்**

இந்தத் திருத்தலம் தேவி உபாசகர் ஸ்ரீசுவாமி ராமதாசர் அவர்களின் முயற்சியிலே உருவான ஒரு சக்திபீடம். பக்தர்களின் அன்பளிப்பும் வற்றாத பக்தியும் அன்பர்களின் ஒத்துழைப்பும் வசதிபடைத்தோரின் தாராள சிந்தையால் பொருளுதவியும் சேர்ந்து கோயில் உருவாகி உள்ளது.

**சக்தி உபாசகர் பற்றி**

சக்திஉபாசகர் ஸ்ரீசுவாமி ராமதாசர் திருப்பணி செய்வதில் பக்தியும் தளரா நெஞ்சமும் நேர்மையும் சத்தியமும் கூடப் பெற்றவர். அம்மனுக்குத் தொண்டு செய்வதையே தமது லட்சியமாகக் கொண்டவர் இவர்.

அது மட்டுமல்ல.

பிரம்பெடுத்துக் குறி சொல்வார். தன்னை நாடிவரும் பக்தர்கள் பிணிபோக்கி நலி போக்கி அருட் பிரசாதம் வழங்குவார்.

ஈடிணையில்லாத தன்னலங் கருதாத சுவாமி ராமதாசர் இத்திருக்கோயிலைக் கட்டி 1964ம் ஆண்டு ஜூன் மாதம் 19ம் தேதி கும்பாபிஷேகம் நடத்தினார். வாழ்க அவர் தொண்டு. வளர்க அவர் சேவை.

இப்போது அவருக்கு எங்கும் மதிப்பும் மரியாதையும். எங்கு கோவில் விசேஷமாயிருந்தாலும் சுவாமிகளை அழைக்கின்ற அளவிலே புகழ் பெற்று விளங்குகின்றார்.

அவருடைய திருப்பணி கோவிலை உருவாக்கியதோடு அழகிய தேர் ஒன்றையும் செய்வித்தார். இத்தேரில் ஒரு விசேஷம் என்ன வென்றால் நானூற்று அறுபத்து நான்கு சிற்பங்களால் தேவியின் திருவிளையாடல்களைச் செதுக்கித் தேரில் பதித்துச் சிறப்பித்தது.

இந்தத் தேருக்குச் செலவு மட்டும், 3-10 லட்சம் ரூபாய். 1976ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 12ம் தேதி தேர் வெள்ளோட்டம் விடப்பட்டது.

இந்தத் தேரை நிர்மாணித்தவர் விஸ்வகர்மா கோடம்பாக்கம் ஸ்தபதி பி.முனுசாமி ஆச்சாரி அவர்களாவார்கள்.

இந்தத் தேருக்குப் பெயர் 'ஆனந்த ஞானரதம்' ஆகும். இந்தத் தேரை நிர்மாணிக்கும் செலவினங்கள் கோவிலுக்கு வரும் பக்தர்களின் சிறு காணிக்கைகளைச் சேர்த்தே பணம் திரட்டப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது.

**மூர்க்க நாயனார்**

திருவேற்காட்டில் ஒரு சிவனடியார் இருந்தார். அவர் பெயர் தெரியவில்லை. சிறப்புப் பெயர்தான் அறுபத்து மூன்று நாயன்மார்கள் பற்றிய பெரிய புராணத்தில் தெரிகிறது.

இவர் சிவசக்தி மீது இடையறாப் பக்தியும், காவி உடை உருத்திராட்சம் திருநீறு அணிந்த சிவனடியார்கள் என்றால் அவரை வரவேற்று உபசரித்து அவர்களுக்குத் தன்னாலியன்ற அளவு உணவு படைத்து அனுப்புவதிலே நெறி கொண்டு ஒழுகி வந்தார்.

இதுவே அன்றாட பணி. எப்போதும் ஓம் நமசிவாய என்ற திருமந்திரம். ஏற்காட்டிலே எழுந்தருளியிருக்கும் வேதபுரீச்வரர் சமேத வேற்கண்ணி அம்மையாரை வணங்குவதே ஜென்மம் எடுத்ததன் பயன் என்று கருதுபவர்.

இவர் இந்தச் சிவத் தொண்டிற்கே தன் செல்வங்களை எல்லாம் செலவிட்டார். அது தீர்ந்ததும் நிலபுலன்களை விற்றுச் செலவு செய்தார்.

அதன் பிறகு குடியிருந்த வீட்டையும் விற்று விட்டு வறுமையில் மூழ்கிவிட்டார்.

இப்படியிருக்கும்போது எப்படி அடியவருக்குத் திருவமுது படைக்க முடியும்? சிந்தித்தார். அவருக்கு வேறு கைத் தொழில்களோ தெரியாது. பிறகு? வருமானத்திற்கு வழி?

நண்பர்களோடு கூடியிருக்கும்போது, அவர்கள் சூதாடுவதைக் காய்கள் வைத்துத்' தாயம் விளையாடு வதைப் பார்த்திருக்கிறார்.

அது ஒன்றுதான் தெரியும் இவருக்கு. போகலாமா? சூதாடியாவது அதில் காசு ஜெயித்து அதில் வரும் பணத்தைக் கொண்டு அடியவர் பசியைப் போக்கலாமா? எனக் கேள்விகேட்டார்.

இது தவறு ஆயிற்றே?

பொய், சூது, களவு, விபச்சாரம் இவையாவும் தீச்செயல்களாயிற்றே? அதைச் செய்வதே பாவம். பாவப்பட்ட காரியத்தில் வரும் பணத்தைக் கொண்டா சிவத் தொண்டு செய்வது? கேள்வி மேல் கேள்வி தன்னையே கேட்டுக் கொண்டார்.

'பாரதக் கதையிலே துரியோதனாதியரிடம் சூதாடித் தானே பாண்டவர்கள் நாடு நகரம் மனைவியெல்லாம் தோற்றனர்' என்ற கதை நினைவுக்கு வருகிறது.

உள் மனம் உரைக்கிறது. சூதாடினால் கூடத் தூய்மை யான சிவனடியார்களுக்குத் தொண்டு செய்யத்தானே பயன்படுத்துகிறாய். அதனால் பாவமில்லை எனக் கூறுகிறது.

அப்படியே சூதாடப் போய் அதிலே வரும் வருமானத்திலே சிவனடியார்களுக்கு அமுது படைக்கிறார். சூதாடும்போது வம்பு தும்பு, போட்டி பொறாமை காழ்ப்பு வருமே, அப்போது, மூர்க்கத்தனமாய் அவர்களைத் தாக்கிப் புத்தி புகட்டுவார். இப்படி முரட்டுத்தனமும் மூர்க்கத்தனமும் இருந்ததால் அவ்வூர் மக்கள் அவரை 'மூர்க்கர்' என்றே அழைத்தனர்.

கொஞ்ச நாள் ஆயிற்று. எத்தனை நாளைக்கு உள்ளூரிலேயே சூதாடிப் பணம் பெற முடியும்?

நண்பர்களிடம் பணம் வற்றிப் போனதால் சூதாட்டத்திற்கு வர யாருமேயில்லை. அதனால் சிவத் தொண்டு நின்றது.

**சிவசக்தியிடம் முறையீடு**

'இறைவா! வேதபுரீஸ்வரீரா! நான் என்ன செய்வேன்? என் சொத்தை அழித்தேன். சூதாடினேன். அதற்கும் வழியில்லை. ஊரைவிட்டே புறப்படப் போகிறேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். வெளியூர் போய் அங்கெல்லாம் சூதாடியே சிவனடியார்களுக்கு அமுது படைத்து சிவஸ்தலங்களுக்குச் சென்று சிவசக்தியைத் தரிசித்தும் வந்தவர் இறைவனடி சேர்ந்தார்.

இவர் சமாதி அடைந்தது கும்பகோணத்தில்.

இவருடைய வரலாறு இன்னொரு வரலாற்றை நினைவுபடுத்துகிறது.

திருமங்கையாழ்வார் மக்களை வழிப்பறி செய்து கொள்ளையடித்துத் திருமால் அடியார்களுக்குத் ததியாராதனை செய்ததுதான் அது.

மூர்க்க நாயனார் சூதாடினார்.

திருமங்கைஆழ்வார் கொள்ளையடித்தார்.

இதுபோல் கொலையும் கொள்ளையும் செய்த ஒரு கொள்ளைக்காரன்தான் தன் மனைவியால் மனம் மாறி வால்மீகி மகரிஷி ஆனார் என்ற சரிதமும் இந்த நேரத்தில் நினைவு கூரத்தக்கதே.

**சோதனையில் கருமாரி**

கருமாரி உக்ர தேவதையே.

இவள் உக்ரவடிவங்கொண்டு சூலத்தைக் கையில் ஏந்தி உடுக்கையை அடித்து முத்துக்களை வீசி எறிவாள். அது அகிலத்து மாந்தர்களை நடுங்க வைக்கும்.

இந்த அன்னை வெள்வேல மரத்தின் கீழே அமர்ந்திருக்கிறாள். எவ்வினையைத் தீர்ப்பவள் இவள்?

"வேப்பிலைரதமேறி வித்தகியே வலம் வருவாய்.
வேதனையைச் சோதனை விளையாட்டாய்
நினைப்பவளே."

என்றும்,

"வேப்பிலை பட்டால் வினைகள் பறந்தோடு மென்று
காப்பு வளைமுதலாய் அணிந்தவளே கார்ப்பவளே
வேப்பம்பால் உண்டவள் தான் வேறு முகம் மாறுபட்டுத்
தோப்புத் துரவெங்கும் துள்ளாட்டம் போடுகின்றாய்."

என்றும்,

"வேப்பிலையின் கசப்பினிலே
வெம்புலியின் சீற்றத்திலே
வேப்பம்பால் வெண்மையிலே
வெண்ணிலவின் குளுமையிலே
தானாகி நின்றவளே தவப்பயனே கண்திறப்பாய்
மானாகி நின்றவளே மனங்குளிர பண் இசைப்பாய்."

என்றும்

வேப்பிலை பற்றி, மாரியம்மன் தாலாட்டிலிருந்து மாரியம்மன் பாடல்கள் வரை சொல்லாமலிருந்ததில்லை. ஏன்– வேப்ப மரம் மாரியம்மனுக்கு ஒளஷதம்.

மக்கள் பிணி தீர்க்க அவள் வழங்கும் மருந்து வேப்பிலை. கிருமிகளைக் கொல்லும் நாசினி என்றும் சொல்லலாம்.

**வேப்பிலையின் சிறப்பு**

வேப்பமரங்களில் அற்புதமாய் பால் சுரந்து ஊற்றெடுத்து ஒழுகியோடும். மக்கள் ஆவலாய் பயபக்தியோடு அதைப் பருகுவார்கள். பிணி போக்கும் மருந்தாகக்கூட பயன்படுத்துவார்கள்.

அரசமரத்தினடியிலும் வேப்பமரத்தினடியிலும் அன்னை கொலுவிருப்பது பழக்கமாகி விட்டது. ஆகவே பெண்கள் அரச மரத்தையும் வேப்ப மரத்தையும் சுற்றுவர், பிள்ளைப் பேறு கிடைக்க வேண்டும் என்று.

இரண்டு மரங்களையும் ஒன்றாகச் சேர்த்து வளர்த்து வணங்குவதும் உண்டு.

கேட்டதைக் கொடுக்கின்றாள்
கோமாதா உமையவளே

கேள்விக்குப் பதிலானாய்
பாட்டினில் பொருளானாய்
வேப்பமரம் தலவிருட்சம்
வேப்பிலையோ அருமருந்து
வறுமைதனைக் களைந்து
வளமையினைக் கொடுப்பவளே!

என்றும்,

இப்படி வேப்பமரம் மாரியம்மனுக்குத் தலவிருட்ச மாக இருக்கிறது. வேப்பிலை அருமருந்து. குழந்தை களுக்குப் பாடம் போடுவதற்கு வேப்பிலையைத் தான் பயன்படுத்துவார்கள். பிணிபோக்க வல்லது. வினை தீர்க்கக் கூடியது. வாழ்வளிக்கும். வளமான சுகம் அளிக்கும். கிருமிகளைக் கொல்லக்கூடிய தன்மை வேப்பிலையில் இருக்கிறது.

**ஒவ்வொரு ஐதீகம்**

விநாயகருக்கு அருகம்புல் ஏற்புடையதானது. அருகம்புல் விஷத்தைத் தடுக்கக்கூடிய தன்மை கொண்டது. மாட்டுச் சாணத்தை எடுத்து ஓர் இடத்தில் கொட்டி வைத்தால் அதில் இரண்டு நாள் கழித்துப் பார்த்தால் புழுக்கள் உற்பத்தியாகியிருக்கும்.

அதே சாணத்தைக் கொஞ்சம் எடுத்து பிள்ளை யாராகப் பிடித்து வைத்து அதில் சில அருகம்புல்லை சொருகி வைத்தால் அதில் புழுவே உற்பத்தியாகாது. புழு உற்பத்தியாகும் தன்மையை அருகம்புல் தடுக்கிறது.

சிவபெருமானுக்கு வில்வஇலை பிரியமானது. வில்வ இலை, தீராத பிணிகளை எல்லாம் தீர்க்கக்கூடும் அருமருந்து.

திருமாலுக்கு முக்கியமானது துளசி. துளசியும் மருந்துக்குப் பயன்படும் அரிய மூலிகை. ஆகவே,

அம்பாளுக்கு மிகவும் இஷ்டமான மரம் வேப்பமரம்.

அரசமரம் சிவனுக்கு அர்ப்பணம்.

வேப்பமரம் சக்திக்கு அர்ப்பணம்.

வேப்பமரத்தைக் கிராமங்களில் தெருக்களிலும் தோட்டங்களிலும் வைப்பார்கள். வேப்பமரக்காற்று உடல் சுகாதாரத்திற்கு நல்லது. சுவாசிப்பதற்கும் நல்லது.

வேப்பமரம் கோடைக் காலத்திலும் துளிர்விடக் கூடியது. வேம்பு மாத்திரம் சூரிய உஷ்ணத்தால் ஏற்படக்கூடிய கசப்பு உணர்ச்சியை ஏற்று மகிழ்ச்சியாக வளர்கிறது.

வேம்பில் மூன்று வகை உண்டு.

கரு வேம்பு

மலை வேம்பு

சர்க்கரை வேம்பு

இவை மரங்கள் செடியினத்தில் நிலவேம்பு, சிவனார் வேம்பு, இவை எல்லாமே உஷ்ணமான பூமியில் விளைபவை. நம்முடைய கிராமங்களில் வைத்தியர்கள் கை வைத்தியமாக வேப்பிலையை, வேப்பமரத்துப் பட்டையை, வேரின் பட்டையை வியாதிக்குப் பயன் படுத்துவார்கள். இந்தப் பட்டைகளை இடித்துப் போட்டுக் கொதிக்க வைத்துக் கஷாயமாக்கி உள்ளுக்குச் சாப்பிட்டால், உடல் சோர்வு நீங்கும். பசி இன்மை போகும்.

'மாரியம்மன் வார்த்து' இறங்கு முகத்தில் தண்ணீர் விடுவார்கள். ஒரு பெரிய பாத்திரத்தில் குளிர்ந்த நீரை நிரப்பி அதில் வேப்பிலையை உருவிப் போட்டுக் கொஞ்ச நேரம் ஊறவைத்துப் பிறகு ஊற்றுவார்கள்.

வேப்பங் கொட்டையிலிருந்து எண்ணெய் தயாரிக்கிறார்கள். அந்த எண்ணெய் வாதம், சீதலம், மாந்தம் இவைகளைப் போக்க உதவுகிறது. வேப்பம் பூவிலிருந்து கஷாயம் தயாரித்துப் பித்தவாந்திக்குக் கொடுப்பார்கள். வேப்பங் கொட்டையில் சோப்பு தயாரிக்கலாம்.

வேம்பின் பெயரில் வேம்புலியம்மன் என்று சக்தி தேவதைகள் கோவில் கொண்டுள்ளனர்.

**பழவந்தாங்கலில் வேம்புலியம்மன்**

வேம்பு என்பதைக் குறித்து வேம்புலியம்மன் என்றும் கூறலாம். வெம்புலி அதாவது கொடுமையான புலியை வாகனமாகக் கொண்டவள் என்றும் கூறலாம்.

இதற்கு உதாரணமாகச் சென்னையிலிருந்து சைதாப் பேட்டை கிண்டி வழியாக ஆலந்தூருக்கும் பரங்கி மலைக்கும் மீனம்பாக்கத்திற்கும் நங்கநல்லூருக்கும் நடுவண் பழவந்தாங்கல் என்றொரு ஊர் இருக்கிறது. அங்கே வேம்புலியம்மன் கோவில் ஒன்று இருக்கிறது. இது ஒரு சக்தி பீடம்.

சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் பழவந்தாங்கலில் பெரு நிலங்களுக்குச் சொந்தக்காரராக ஒரு பெரு நிலக்கிழார் இருந்தார்.

நிலத்தை ஏர் உழும்போது ஏர் கலப்பையின் முனை ஒரு கல்லிலே இடித்தது.

என்னவோ இடிக்கிறதே என்று மண்ணை அகழ்ந்து பார்க்கும்போது ஒரு கல்லில் இருந்து இரத்தம் பெருகியது. ஏர் உழுதோருக்கோ ஒன்றும் புரியவில்லை அதற்குள் இந்த விஷயம் தெரிந்து ஊரே கூடிவிட்டது.

அந்த இடத்தில் ஒரு வேப்பமரமும் இருந்தது. நிலத்துச் சொந்தக்காரர் ஒன்றும் புரியாமல் தவிக்கும்போது ஒருவர் மீது 'மருள்' வந்து, "இந்தக் கல் சாதாரணக் கல் இல்லை. இது ஒரு மாரியம்மன். வேப்பமரத்தின் கீழ் இருப்பதால் வேம்புலியம்மன் ஆகும். இதற்கு இந்த இடத்தில் கோவில் கட்ட வேண்டும். இவள் சுயம்புவாய் தோன்றிய அம்மன்" என்ற கூறியது.

அப்படிக் கட்டப்பட்ட கோவில்தான் வேம்புலி அம்மன் கோவில். இந்தக் கோவிலில் இப்போது தர்மகர்த்தாவாக இருக்கும் திரு. டி. எல்லையா நாயுடுவின் மூதாதையர்களே பரம்பரையாகத் தர்மகர்த்தாவாக இருந்தார்கள்.

இந்த அம்மன் சக்தி வாய்ந்தவள். இவளை வணங்கி தலைவிரித்தபடி வேப்பமரத்தையும் சுற்றிவந்து வேப்பிலையை மருந்து என்று உண்டால் எப்படிப்பட்ட பிணியும் விலகிவிடும்.

இது கண்கண்ட பிரசித்தமான தெய்வம்.

"சுயம்புவாய்த் தோன்றிவிட்டாய்
சோதனையின் மத்தியிலே
சுந்தரியே உமை மகளே!
எங்களை நீ கவர்ந்துவிட்டாய்

என்றும்,

"வேம்புலியம்மனைப் பாருங்கடி –இந்த
வேப்பிலைக் காரியை வேண்டுங்கடி
இனிப்பும் கசப்பும் இன்பதுன்பமென்று!
தத்துவம் சொல்லிவிட்டாள் கேளுங்கடி!

என்றும்,

“தீராத நோய்க்கும் வேப்பிலையைத் தந்து
மருத்துவம் தந்திட்டாள் கேளுங்கடி!
நேராக அவள் பார்வை பட்டுவிட்டாலே
சேராத பந்தங்கள் சேருமடி!

*என்றும்,*

“வேம்புலித் தாயே வினை தீர்ப்பாயே
வேப்பிலையின் வடிவத்திலே வேதவல்லி நீயே!

*என்றும்,*

“வேப்பிலையில் வேம்பானாய்
விதியை மாற்ற ஒரு சிரிப்பு

*என்றும்,*

“வேப்பம்பால் உண்டவளே
வேல்விழியே மாதரசே
வேலியிட்ட பயிர் போல
வேண்டுகிறேன் காத்தருள்வாய்

*என்றும்,*

“வேப்பிலையை மருந்தாக்கி மகிழுவாயடி!
தொட்டிலில் தவழுவாயடி
வேம்புலியை வாகனமாய் ஆக்கினாயடி!
ஆணவத்தை போக்கினாயடி

*என்றும்,*

“வேப்பிலைக்காரி வேம்புலிக்காரி
வீரம் விளைத்துவிட்ட விமலி நீதாண்டி
குண்டலக் கமலி நீதாண்டி!

*என்றும்*

வேப்பிலையின் மகத்துவமும் வேம்புலிக்காரியின் அருள் விளையாட்டும் மேற்கண்ட பாடல்களால் தெரிகிறது.

"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி"

என்ற பழமொழி இருக்கிறது.

ஆலம் விழுதும் வேலங்குச்சியும் பல்லுக்கு உறுதியளிக்கும். நாலடியாரும், திருக்குறளும் சொல்லுக்கு உறுதியளிக்கக்கூடியவை என்பதே அதன் கருத்து.

வேலங்குச்சியைப் போலவே வேப்பங் குச்சியும் பல் விளக்க உதவும். வேப்பங் குச்சியால் பல் விளக்கினால் கோபம் அதிகமாக வரும்! இது எனது அனுபவம்.

**வேப்பிலைக்காரி**

தெலுங்கு வருஷப் பிறப்பன்று வேப்பிலையையும் வெல்லத்தையும் அரைத்துப் பச்சடிபோலக் காலையில் எல்லோரும் உண்பர்.

வேப்பிலைச்சாறு விஷத்தைத் தடுக்கும். வேப்பம் பூவைப் பொறுக்கிக் காயவைத்து அதில் குழம்பு வைக்கலாம். கஷாயம் வைக்கலாம். வேப்பம்பூ ரசம் வைக்கலாம். எதற்கும் உபயோகம் ஆகும்.

பண்டை நாளில் பாண்டிய மன்னர்கள் கூட வேப்பம்பூ மாலையை வெற்றியின் சின்னமாக அணிந்திருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது.

வேப்பிலையும் பொற்கரகம் வீதிவிளையாடிவர
பதினாயிரம் கண்ணுடையாள் பராசக்தி வாருமம்மா
கத்திபோல வேப்பிலையைக் கதறவிட்டாய்
லோகமெல்லாம்
ஈட்டிப்போல் வேப்பிலையை இனியனுப்பிக்
கொண்டவளே

வேப்பிலைக்குள்ளிருக்கும் வித்தைகளை யாரறிவார்?
வேணு மென்று காரடி வேப்பஞ்சிலையாளே!
வேம்பு ரதமேறி வித்தகியே வாருமம்மா!
வேப்பிலையால் தான்தடவி விசிறி முத்தமுத்திவிடு
வேப்பிலை பட்டவுடன் வினைகள் பறந்தோடுமம்மா

என்று மாரியம்மன் தாலாட்டில் வேப்பிலை பற்றிச் சிறப்பான வரிகள் நம்மைக் கவர்கின்றன.

கருமாரியம்மன் புராணத்தில் மஹாமாரிப் படலத்தில்

"துடியோசை பம்பை ஒலி அதிர்ந்து ஆட
அருட்சக்தி கருமாரி முதியோளாய் வடிவெடுத்து
வேப்பிலையும் பிரம்பும் கொண்டாள்
பிரம்பேந்தி பெருங்கிழவி ஒய்யார பெரு நடையால்"

என்ற பாடலில் வேப்பிலை குறிக்கப்பட்டிருக்கிறது.

**திருநீற்றின் மகிமை**

திருவேற்காட்டு கோயிலிலே சாம்பலைத்தான் முக்கிய பிரசாதமாகத் தருகிறார்கள்.

ஏன் திருஞானசம்பந்தர் மதுரை பாண்டிய மன்னனின் வெப்பு நோயைத் திர்க்க,

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் ஆலவாயன் திருநீறே."

என்று திருநீற்றுப் பதிகம் பாடித் திருநீறு பூசி வெப்புநோயைத் தீர்த்தார் என்பது பெரிய புராணக் கூற்று.

மாட்டுச் சாணத்தைக் காய வைத்துத் தீயிலிட்டு வெந்து வெண்ணிறமாய்ப் பூத்து நிற்கின்ற சாம்பலைத்தான் திருநீறு என்கிறோம்.

ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?

உள்ளத்தில் உள்ள கருமையைப் போக்கி வெள்ளை மனமாக்க வேண்டும் என்ற தத்துவமே கறுப்பான சாண உருண்டையை எரித்து வெள்ளை நிறமாக்கி அதை நெற்றியிலே பூசுவதற்கு அடிப்படைக் காரணமாய் அமைந்தது.

ஒருமுறை சக்தியிடம் ஞானவேல் வாங்கி சூரபதுமனைக் கொன்றபின் முருகன் அன்னையிடம் ஆசி பெற வந்த இடம் திருவேற்காடு எனப் பலர் குறிப்பிடுகிறார்கள். ஆனால் கந்த புராணத்தில் அத்தகைய குறிப்பு ஏதுமில்லை.

**இதிலும் தத்துவம் இருக்கிறது!**

ஆக, திருநீறு அங்கே கறுப்பாக இருக்கிறது. வெண்ணீறு போல் இல்லாமல் இருப்பதற்குக் காரணம் கருமாரியம்மன் கோயிலாயிற்றே விபூதி கறுப்பாய்த்தான் இருக்கவேண்டுமென்று ஏற்பாடாகியிருக்கின்றது என்று நினைக்கத் தோன்றுகிறது.

திருநீறு என்றாலே வெள்ளை வெளேர் என்று இருப்பதுதான். எருமுட்டை என்பார்கள். விராட்டி என்பார்கள் மாட்டுச்சாண உருண்டையை. அதை நெருப்பிலிட்டால் வெள்ளிய சாம்பல்தான் ஆகும்.

மனிதனின் முடிவில்கூடச் சுடுகாட்டில் வெள்ளைச் சாம்பல்தான் மிஞ்சுகிறது. நம் முடிவு இதுதான் என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும் என்பதும் திருநீறு பூசுவதன் நோக்கமாயிருக்கலாம்.

**"பிறப்புண்டு இறப்புண்டு பிறந்தபின்பு அறிந்திடாயோ**
**உறவுண்டு மனைவியுண்டு உற்றவர்கள் சூழ்வதுண்டு**
**கூடவே வந்திடுவார் கூப்பிட்டாலும் வருவாரோ?**
**கூவி அழைத்திடுவாய் குவலயத்தை ஈன்றவளை."**

இப்படிப்பட்ட தத்துவப் பாடல்கள் நம்மை நினைத்துப் பார்க்கத்தான் தூண்டுகின்றன.

சக்தி பீடங்களில் குங்குமம்தான் முக்கியத்துவம் பெறும் ஆனால் சக்தி பீடம் என்று சொல்லப்படும் திருவேற்காட்டில் முக்கியத்துவம் கருமை நிற சாம்பலுக்கே! அடுத்துதான் குங்குமப் பிரசாதம்.



# ஆதி கருமாரியம்மன்

**மாயை மறைந்தது**

ஒரு சமயம் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் எப்போதும் போல் போர் நடந்தது.

ஒவ்வொரு முறையும் அசுரர்களே வெற்றிபெறுவார்கள். பிறகு மகாவிஷ்ணுவோ, சிவனோ, ஆதி சக்தியோ தலையிட்டுத் தேவர்களுக்கு வெற்றி தேடித் தருவார்கள். இப்படி ஒரு யுத்தம் நடந்ததும் தேவர்களும் இந்திரனும் வெற்றி பெற்றுவிட்டார்கள்.

தேவர்களுக்கு எங்கும் பெருமதிப்பு ஏற்பட்டது. தம் வெற்றிக்கு ஆதிசக்தி காரணமாகியிருந்ததை மறந்தார்கள். எல்லாம் நாமே என இறுமாந்தனர். உடனே பரப்பிரம்மம் இவர்களுக்குப் பாடம் புகட்ட எண்ணியது. ஆதிசக்தி தேவி வாளாவிருந்தாள். சிவசக்தி அதற்காக முனைந்தார்.

பரப்பிரம்ம சொரூபரான பரமேச்வரன் யக்ஷன், கந்தருவன், கின்னரர், கிம்புருடர், எல்லா இனத்தவரின் கலந்த தோற்றத்தில் உருவாகியது ஒரு பயங்கர உருவம். அதற்கு இரண்டு கொம்புகள் இருந்தன. இறக்கைகள் இரண்டு புஜப்பகுதியிலே முளைத்திருக்கப் பின் பகுதியில் வால் முளைத்திருக்கப் புதுமாதிரியான விசித்திர உருவம் ஒன்று தோன்றியது.

**விசித்திர மாயன்**

ஆமாம்.

யார் பார்த்தாலும் பயப்படும்படியான அதிசயப் பிறவி போல் தெரிந்தது.

நேரே தேவலோகம் போனான் விசித்திர புருஷன்.

ஆங்காரமிட்டு வந்து குதித்த இந்த உருவத்தைப் பார்த்துத் தேவர்கள் யாரோ ஓர் அசுரன்தான் இப்படி மாய உருக்காட்டிப் பயப்படுத்த இத்தகைய வேடம் புனைந்து வந்துள்ளான் என அஞ்சி, அக்னி தேவனை அழைத்து விபரத்தைச் சொன்னதும், அக்னி தேவன் படை திரட்டிக்கொண்டு போர்க் கோலம் பூண்டவனாய் யக்ஷனான கோர புருஷனிடம் வந்து கர்ஜித்தான்.

"யாரடா நீ அசுரப் பதரே! அசுரர்களைத்தான் நாங்கள் முறியடித்து வெற்றி மாலை சூடி வந்து விட்டோமே இப்போது உன் விதியை முடித்துக் கொள்ள வந்தனையோ தனியே! மடப்பதரே!" எனக் கர்ஜித்தான் அக்கினி மார்தட்டி!

**அக்கினி தேவன்**

"நீ யாரப்பா? உன் பெயரென்ன?" என்று கேட்டான் அந்த விசித்திர நாயகன். "நானா? உலகத்தையே அழிக்கக்கூடிய சக்தி படைத்தவன். என் பெயர் அக்னி" என்றான்.

"ஓ! நீ தான் அக்கினியா? என் முன்னே வந்து ஆர்ப்பாட்டம் செய்கிறாயே, எதற்காக?" எனக் கேட்டான் நாயகன்.

"எங்களை அழிக்க வந்த உன்னை என் சக்தியால் எரித்து அழிக்கவே தேவர்கள் என் உதவியை நாடினர்.

அதுதான் வந்தேன். நீ யார்?" எனக் கேட்டான் அக்கினி பகவான்.

"நான் சாதாரணமானவனப்பா; போகட்டும். என்னோடு சண்டை போடுவதிருக்கட்டும். இதோ இந்தத் தர்ப்பைப் புல்லைப் போடுகிறேன் கீழே, இதை எரித்து உன் சாமர்த்தியத்தைக் காட்டு. பிறகு உன்னைப் பற்றி நானே தெரிந்து கொண்டு போய் விடுகிறேன்" என்றான் அந்தக் கோர ரூப நாயகன் இறக்கைகளை ஆட்டியபடி.

"பூ. இவ்வளவுதானா? தர்ப்பைப் புல்லைத்தானே எரிக்க வேண்டும்? இதோ நொடியில் எரித்துச் சாம்பலாக்கு கிறேன்" என்று தன் சக்தியைப் பிரயோகித்தான் அக்கினி.

ஊஹூம் - நெருப்புப்பற்றவேயில்லை! நெடுநேரம் பிரயத்தனம் செய்தும் அக்கினி தேவனால் ஒன்றும் முடியவில்லை.

தோல்வியுற்ற அக்கினி தலைகுனிந்து ஆயுதங்களைக் கீழே போட்டு அவமானத்தால் நிலைகுலைந்து நின்றான்.

**வாயுவும் வந்தான்**

இதையறிந்த தேவர்கள் வாயுவை அழைத்தனர்.

வாயுதேவன் ஆக்ரோஷத்தோடு மார்தட்டி வந்து நின்று, "ஏ மூட ஜென்மமே! நான் யார் தெரியுமா? வாயு தேவனல்லவா? இந்தத் தர்ப்பைப் புல்லையா எரிக்க முடியவில்லை அக்கினியால்? நான் என்ன செய்கிறேன் பார்" எனக் கொக்கரித்தான்.

பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த யக்ஷ நாயகன்,

"ஏ! வாயுவே! இந்தத் தர்ப்பைப் புல்லை உன்னால் என்ன செய்யமுடியுமோ செய்து பார்" என்றான்.

"பூ- இவ்வளவுதானா? ஒரு நொடியில் இருக்குமிடம் தெரியாமல் பறக்க வைக்கிறேன் பார்" என்றான். உடனே தென்றல் காற்றை வீசினான். பயனில்லை. பெருங் காற்றைப் பிரயோகித்தான் பயனில்லை. சூறாவளிக் காற்றையும் புயற்காற்றையும் பிரளயகாலக் காற்றையும் பிரயோகித்துப் பார்த்தான்.

தர்ப்பைப் புல்லை அசைக்க முடியவில்லை.

வாயுவும் தலை குனிந்தான் தோல்வியோடு. தேவர்கள் இந்திரனிடம் ஓடினர்.

**ஆயிரங்கண்ணுடையான் வந்தான்**

"அமரர் தலைவா! இந்திர லோகத்திற்கே தலைவனே! யரோ ஒரு புதுமாதிரியான யக்ஷன் வந்திருக்கிறான். அக்கினியாலும், வாயுவாலும் ஒன்றுமே செய்ய முடியவில்லை. தாங்கள்தான் வந்து எங்களைக் காக்க வேண்டும்" என்று தொழுது இறைஞ்சினர்.

இந்திரனோ போர்க்கோலம் பூண்டு ஐராவதம் என்கிற வெள்ளை யானை மீதேறி வந்தான்.

தேவேந்திரன் வந்ததும், அவன் கண்களுக்குத் தன் உருவம் தெரியாமல் மறைந்து கொண்டான் யக்ஷன். ஆனால் மற்றவர் கண்களுக்கு அவன் உருவம் தெரிந்தது.

வந்த இந்திரன் "தேவர்களே! யரோ விசித்திரமான கொம்புகள், இறக்கைகள், வால் முளைத்த அசுரன் ஒருவன் வந்திருக்கிறான் என்றீர்களே- எங்கே? அவன் காணவில்லையே" எனத் தேடினான்.

"என்ன தலைவா! எதிரே இருக்கின்ற விசித்திர மாயாஜாலக்காரனைத் தெரியவில்லையா?! எங்களுக்குத் தெரிகிறதே! இதோ நிற்கிறானே அந்த மாயன்" என்று தேவர்கள் சொன்னதும்,

இந்திரன் ஆதிசக்தியைத் தியானித்தான்.

**சக்தியை வேண்டினான்**

"அன்னை அபிராமியே! அருட்பெருஞ் சோதியே! ஆதியே! நீதியே! நிமலியே! நிரந்தரியே! அபூர்வ சிந்தாமணியே! அன்ன பூரணியே! அபிஷேக பத்தினியே! அகிலாண்டேஸ்வரியே! ஆனை முகத்தோன் அன்னையே! சூலமுண்டோன் துணைவியே! பாற்கடலில் பள்ளி கொள்ளும் பரந்தாமன் தங்கையே!

பரம்பொருளே! பாலகுமாரனின் அன்னையே! பராசக்தியே! பரமனின் பாதியுடல் பற்றிய ஞானமே! உத்தமியே! உமாமகேஸ்வரியே! ஊர்த்துவ தாண்டவ மாடிடும் தாட்சாயணியே! உண்ணாமலையே! காவியமே! ஓவியமே! கருணைக் கடலே!"

என்று பிரார்த்தித்து உள்ளம் உருகிக் கண்ணீர் சிந்தித் தொழுதான்.

**ஆதிசக்தி உற்பவித்தாள்**

உடனே ஆதிசக்தி நாயகி தோன்றினாள்.

"இந்திரா! எழுந்திரு யக்ஷன் உருவில் வந்தது பரப்பிரம்மம். அதுதான் மூல சக்தி. அதுவே சர்வசக்தி களுக்கும் ஆதாரம். அதன் துணையில்லாமல் எதுவுமே இயங்காது. வாழாது. வெற்றி பெறாது. நீங்கள் அசுரர்களை வென்றதும், அதன் ஊக்க சக்தியால்தான். இந்த உண்மையை மறந்து நீங்கள் சுய சக்தியின் துணையால் வெற்றி பெற்றதாக இறுமாந்திருந்தீர்கள். இந்த அஞ்ஞானத்தைப் போக்கவே பிரம்மமே யக்ஷன் உருவில் வந்து உங்களுக்குப் புத்தி புகட்டியிருக்கிறது. அதன் துணையும், சக்தியும் இல்லாமல் உங்களால் ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியாது'" என்றாள்.

"தேவி! நீயே சக்தி. நீயே பரப்பிரம்மம். சிவமே சக்தி. சக்தியே சிவம் என்பதை உணர்ந்தோம்" என்றவர்கள்,

"அமுதூட்டும் நாயகியே! வேம்புலியம்மனே! வினை தீர்க்கும் வித்தகியே! நாங்கள் அகந்தை அழிந்தோம். ஆதிசக்தியும் பரப்பிரம்மமுமின்றி எந்தத் துரும்பும் அசையாது என்பதைக் கண்டோம்" எனத் தொழுதனர்.

**சிவசக்தி தரிசனம்**

யக்ஷன் மறைந்தான்.

அங்கே சிவனும் சக்தியும் இணைந்து சிவசக்தி உருக்காட்டினார்கள்.

தேவர்கள் யாவரும் தொழுதார்கள்.

அந்த மூல சக்தியே கருமாரியாகத் திருவேற்காட்டிலே சென்று வீற்றிருக்கிறாள்.

ஆதிசக்தி நாயகியின் அம்சமான திருமகளை எட்டு லட்சுமிகளாகப் பிரித்து அவரவர்களுக்கு ஒவ்வொரு நிர்வாகப் பொறுப்பை அளித்துள்ளார்கள். இந்த அஷ்ட லக்ஷ்மிகளைப் பற்றிக் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜெகத்குரு சங்கராச்சாரியார், நமக்குப் புரியும்படிக் கூறிய விளக்கம் சுவைபடத் தெரிகிறது.

| மகாலக்ஷ்மி | - | ஜனாதிபதி |
|---|---|---|
| ஆதிலட்சுமி | - | பிரதம மந்திரி |
| தான்ய லட்சுமி | - | உணவு அமைச்சர் |
| தைரிய லட்சுமி | - | பாதுகாப்பு அமைச்சர் |
| கஜலட்சுமி | - | அறநிலைய அமைச்சர் |
| சந்தான லட்சுமி | - | சுகாதார அமைச்சர் |
| விஜயலட்சுமி | - | போக்குவரத்து அமைச்சர் |
| வித்யா லட்சுமி | - | கல்வியமைச்சர் |
| தனலட்சுமி | - | நிதியமைச்சர் |

இவர்களில் ஆதிலட்சுமி ஆதிக்கும் ஆதியானவள். அவளுக்குப் பெயரே தேவையில்லை.

திருப்பாற்கடலை அசுரர்களும், தேவர்களும் கடைந்தபோது முதலில் விஷம் வந்தது. சிவபிரான் உண்டார். காமதேனு சந்திரன் மற்றவர்கள் வந்தார்கள். அடுத்து லட்சுமி வந்தாள். அவளே ஆதி லட்சுமி.

அவள் ஆதியானவள்.

கருக்களும், உருக்களும் தோன்றும் முன்னே கருவும் உருவுமின்றி நிறைந்தவள். உலகமெல்லாம் தானாகி நின்றவள். அவளே கருமாரி.

**ஆதிமூலமே அபயம்!**

ஒரு சமயம் சாரல் காடுகளிலிருந்து யானைக் கூட்டம் ஒன்று வந்தது. பெண் யானைகளும், ஆண் யானைகளும் ஏரியில் இறங்கிக் குளித்தன.

யானைகளும் யானைக்குட்டிகளும் மகிழ்ந்து விளையாடின.

அந்த ஏரியில் முதலை ஒன்று வெகு நாளாகவே வசித்து வந்தது. அந்த முதலை, யானைக்கூட்டத்தின் தலைவனான ஓர் ஆண் யானையை நெருங்கி அதன் காலைக் கவ்விப் பிடித்தது.

யானை திடுக்கிட்டு முதலையின் வாயிலிருந்து காலை விடுவித்துக் கொள்ள முனைந்தது.

முதலை யானையை நடு ஏரி வரை இழுத்துச் சென்றது. முதலை யானையை இழுக்க, யானை காலை உதறி இழுக்கப் போராட்டம் வலுத்தது.

பெண் யானைகளும் குட்டிகளும் பயந்து பிளிறியபடி கரையேறின.

நாட்கள் கடந்தன. முதலையும் யானையை விட வில்லை. யானையாலும் மீண்டு வரமுடியவில்லை. நீரிலேயே இருந்து பழக்கம் முதலைக்கு. யானை ஆகாரமில்லாமல் நீரிலேயே நின்று வலி பொறுக்க மாட்டாமல் வேதனைப்பட்டதால் மனம் தளர்ந்தது. சக்தி குறைந்தது. உடல் இளைத்தது. வேறு வழியில்லை என்றதும் அந்தக் கஜேந்திரன் தன்னைக் காப்பாற்றக் கூடியவர் பரந்தாமன்தான் என்று எண்ணி, "ஆதிமூலமே! என்னைக் காப்பாற்று" என ஓலமிட்டது.

கஜேந்திரனின் ஓலம் எங்கும் எதிரொலித்தது. மூவுலகங்களுக்கும் கேட்டது.

**நானில்லை ஆதிமூலம்**

'யார் அந்த ஆதிமூலம்? கஜேந்திரன் யாரை அழைக்கிறது?' என ஒவ்வொருவரும் கேள்வி கேட்டுக் கொண்டு ஒருவரையொருவர் பார்த்தனர்.

'ஆதிமூலம் என்பது நானல்ல' என்றார் சிவபெருமான்!

'நானல்லன்' என்றார் பிரம்மா!

'நானல்லன்' என்றார் மகாவிஷ்ணு!

இப்படி மும்மூர்த்திகளுமே 'நானல்லன்' என்றால் வேறு யார்தான் ஆதிமூலம்? யாரை அபயக்குரல் விடுத்து அழைக்கிறான் கஜேந்திரன்?

கஜேந்திரனின் குரல் எங்கும் எதிரொலித்தது.

'ஆதிமூலமே! அபயம்!'

'ஆதிமூலமே! அபயம்!'

**நானிருக்கிறேன்**

'நானிருக்கிறேன்' என்று மகாவிஷ்ணுவின் கையிலிருந்த சக்கரம் சுழன்றபடி புறப்பட்டுப் போய் முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காப்பாற்றியதாம்.

"நான்தான் அந்த ஆதிமூலம்" என்ற சக்கரம் யார்?

அந்தச் சக்கரம் ஸ்ரீ சக்கரம். அதாவது லட்சுமி. அவள்தான் பெருமாளுக்கும் ஆதியானவள். அவள்தான் போய் முதலையின் வாயைக் கிழித்து அதற்கு மோட்சம் அளித்துவிட்டுக் கஜேந்திரனுக்குத் துன்பத்திலிருந்து விடுதலை அளித்தாள்.

அந்த ஆதிக்கும் ஆதியான லட்சுமிதான் ஆதிலட்சுமி.

பாகவத புராணத்தில் மகாவிஷ்ணுதான் கஜேந் திரனைக் காப்பாற்றினார் என எழுதப்பட்டிருக்கிறது.

**ஆதித் தனிக்கோலம் ஆனான் அடியவற்கா**
**சோதித் திருத்தூணில் தோன்றினான் -வேதத்தின்**
**முன்னின்றான் வேழம் முதலே என அழைப்ப**
**என்னென்றான் எங்கட்(கு) இறை ( நளவெண்பா)**

"ஆதியில் ஒப்பற்றவனாக அவதாரம் எடுத்தவனும் பிரகலாதனுக்காக ஒளி பொருந்திய அழகிய கம்பத்தில் நரசிங்கமாக அவதாரம் செய்தவனும் வேதத்தின் தலைவனாக இருப்பவனும் கஜேந்திரன் என்னும் யானை முதலையின் வாயில் சிக்குண்டு "ஆதிமூலமே!" என்று கூக்குரலிட்டபோது 'ஏன்?' என்று காட்சியளித்து ரட்சித்தவனுமாகிய நாராயணனே எங்கட்குத் தலைவ னானவன்" என்று புகழேந்திப் புலவர் இறைவணக்கம் கூறுகின்றார்.

ஆக ஆதிக்கும் ஆதியான ஆதிலட்சுமியைத் தன்னுள்ளே கொண்ட ஆதிசக்தி நாயகிதான் கருமாரியாக, வருகின்ற அடியவர்க்கு அபயமளிக் கின்றாள்.



# மாரியம்மன் வரலாறு

மாரியம்மன் கோயில்கள் சக்தி பீடங்கள் - அவை கிராமங்களில் எங்குபார்த்தாலும் நிறைந்திருக்கும். மாரியம்மன் கோயில் இல்லாத ஊரே இருக்காது. சில இடங்களில் புற்று வேப்பமரம் இருக்கும்.

அங்கே மாரியம்மன் கொலு வீற்றிருக்கிறாள் என்பது அர்த்தம்.

கிராமத்தின் தொடக்கத்திலே சில காவல் தேவதைகள் இருக்கும். துர்க்கை, காளி, சண்டி, வராகி, மாரியம்மன் என்ற காவல் தெய்வங்களும் குடி இருக்கும்.

சிதம்பரத்தில் நடனம் ஆடிய தில்லைக்காளி, தோற்றுவிட்டதால் ஊரில் ஓரத்தில் கோபமாய் வந்து நின்று விட்டாள்.

தில்லைக் காளி ஆக்ரோஷத்தோடு இருக்கிறாள்.

அதே போல் சென்னை மயிலாப்பூரில் கபாலீசுவரர் கற்பகாம்பாள் நடுவண் கொலுவீற்றிருக்க அதே மயிலையின் எல்லையில் கோலவிழியம்மன் என்ற காளி கோயில் இருக்கிறது.

அது காவல் தெய்வம்

**சென்னம்மன்**

சென்னைக் கோட்டைக் கடற்கரை ஓரமாகக் காளிகாம்பாள் கோயில் இருந்தது. அதுதான் தம்புச் செட்டித்தெருவில் விஸ்வகர்மாக்களின் பராமரிப்பில் கோயில் கட்டப்பட்டு இன்றும் அங்கே இறுமாந்து காவல் தெய்வமாய் இருக்கிறது.

இந்த அம்மனுக்கு சென்னம்மன் என்று ஒரு பெயருண்டு. சென்னம்மனை மையமாக வைத்துத்தான் சென்னப்பட்டணம் எழுந்து இன்று சென்னை யாகியிருக்கிறது.

இவளுக்கு, அக்ஷர சொரூபிணி, கோட்டையிருக்கு மிடத்தில் இருந்ததால் கோட்டையம்மன் என்ற பெயர்கள் உண்டு.

இந்தக் காளிகாம்பாள் கோயில் கடற்கரையிலே இருந்தபோது மேலும் கட்டடங்கள் கோட்டைகள் கட்டுவதால் கோவிலுக்குப் போக்குவரத்துக்கு இடையூறு ஏற்படுகிறதே என அதிகாரிகளிடம் முறையிட வெள்ளை அதிகாரிகள், மனம் கனிந்து இந்தக் கோயிலை நீங்கள் எங்கு விரும்புகிறீர்களோ அங்கே கட்டிக் கொள்ளுங்கள் என்று அனுமதியும், பொருள் வசதியும், மானியமும் வழங்கினார்கள்.

அதையே வைத்துத் தம்புச்செட்டித் தெருவில் கோவில் கட்டப்பட்டிருக்கிறது.

இங்கே சிறப்பு என்னவென்றால், செல்வம் வேண்டும் என யாசிப்பவர்கள் அவளிடம் போனால், நிச்சயம் செல்வச் செழிப்பு உண்டாகும்.

**மராட்டிய மாவீரன்**

இன்னொரு சிறப்பு.

இந்தக் காளிகோயிலில் வீரசிவாஜி காளிகாம்பாளை வணங்கி வழிபட்டிருக்கிறார்.

அதைவிட மிகச் சிறப்பு - அத்வைத மதத்தை ஸ்தாபிக்க அவதரித்த ஆதிசங்கர பகவத் பாதர், மாங்காடு காமாக்ஷி, காஞ்சிபுரம் காமாக்ஷி கோயில்களில் ஸ்ரீசக்கரம் எழுதி அமைத்து சாந்தப்படுத்தியது போலச் சென்னையில் தம்புச்செட்டித் தெருவிலுள்ள காளிகாம்பாளுக்கும், ஸ்ரீசக்கரம் எழுதிப் பிரதிஷ்டை செய்து சாந்தப்படுத்தியுள்ளார்!

இது போன்ற ஒரு சிறப்பு,

**பாட்டுக்கு ஒரு புலவன்**

இந்தியக் கவிஞர்களில் ஒருவரான பாட்டுக்கு ஒரு புலவன் பாரதியான சுப்ரமணிய பாரதியார் இந்தக் கோயிலில் அடிக்கடி வந்து தோத்திரப்பாடல்கள் இயற்றிப் பாடியிருக்கிறார். அவரின் இஷ்ட தெய்வமே மாகாளிதான்.

"ஆத்தாளே! மாகாளி! ஆர்த்தெழுந்த கடலலையில்
பூத்தாளே! பொங்கும் நுரைப் பூவழகி! பொலிவுடனே
காத்தவளே! காவியமே! காவல் தெய்வமே! காளி!
கோத்தமுத்து! குவளை மலர் குணக்குன்றே! மாகாளி!"

என்றும்,

"சங்கரி! பயங்கரி! சங்கரனின் நாயகியே!
மங்காத சுடரொளி நீ! மரகதம் போல் மேனியொடு
தங்காத துன்பத்தை தவிர்த்திட்டு வறுமை ஒழி
சிங்கவாகனம் ஏறும் சீரார்ந்த மாகாளி"

என்றும் மாகாளியினைப் போற்றிப் புகழ்ந்து கவிஞர்கள் ஏற்றியிருக்கிறார்கள்.

இது மட்டுமல்லாது இந்த உக்ர தேவிக்கு கிண்ணித்தேர் செய்து வெள்ளோட்டம் விடுவது மிகச் சிறப்பு வாய்ந்தது.

இதே சென்னையில் ராயப்பேட்டையில் எத்தனையோ மாரியம்மன் ஆலயங்கள் உள்ளன. அதில் பீட்டர்ஸ் சாலையை ஒட்டிய மைதானத்தில் பெரிய பாளையத்தம்மன் கோயில் கொண்டிருக்கிறாள். ஒரு வெள்ளைக்காரர் அளித்த மான்யமான நிலத்தில்தான் இந்தக் கோயில் கட்டப்பட்டிருக்கிறது.

**செருக்காளத்தம்மன்**

சென்னையிலே, ரத்ன செட்டித் தெருவில் செருக்காளத்தம்மன் கோயில் இருக்கிறது. இது மிக சக்தி வாய்ந்த கோயிலாகும். இதுவும் உக்ர தேவிதான். ஐலண்டு மைதானத்தில் நடைபாதையில் முனீஸ்வரன் கோயிலும், மாரியம்மன் கோயிலும் எதிரும் புதிருமாய் இருக்கின்றது.

**முண்டகக் கண்ணியம்மன்**

சென்னையில் மயிலாப்பூரில், கச்சேரி ரோட்டைக் குறுக்கிடும் தெருவுக்குப் பெயர் முண்டகக் கண்ணியம்மன் தெரு என்பது.

முண்டகம் என்றால் தாமரை என்று பொருள். முண்டகம் + கண்ணி = முண்டகக் கண்ணி. தாமரை போன்ற கண்ணுடையவள் அவள். தாமரை போன்ற முகமுடையாள் எனப் புலவர் வர்ணிப்பர்.

ஆனால் இந்த அன்னைக்குப் பெயர் முண்டகக் கண்ணி என்றிருக்கிறது. இதன் ஆதி கோயில்அடையாறு எல்லையில் இருக்கிறது. இவளுக்கு மாதங்கனியம்மன் என்ற பெயரும் வழங்குகிறது. அங்கிருந்த அம்மனைத் தான் இங்கே மயிலையிலே அமைத்துக் கோயில்

கட்டியிருக்கிறார்கள். இவளிடமும் பக்தர்களை வசிகரிக்கும் சக்தியிருக்கிறது.

**அங்காள பரமேஸ்வரி**

அங்காள பரமேஸ்வரி என்றாலே வடஆற்காடு மாவட்டத்தை அடுத்த மேல்மலையனூர்தான் நினைவுக்கு வரும். அந்தத் தலம்தான் பிரம்மஹத்தி தோஷத்தோடு அலைந்து திரிந்து வந்த சிவபெருமானின் பிரம்மஹத்தி தோஷத்தை நீக்கிய திருத்தலம். வினையறுக்கும் வித்தகியவள்.

"அங்காள ஈஸ்வரியே! அகிலாண்டேஸ்வரியே!
அங்காள ஈஸ்வரியே! அபிஷேகப் பத்தினியே!
ஓங்கார வல்லபியே! உலகாளும் நல்லவளே"

புற்றிலே நாகவடிவிலே வாழ்கின்ற ஸ்தலம் மேல்மலையனூர் ஸ்தலம். அதன் பெயரிலே சென்னையிலே -

அதே முண்டகக் கண்ணியம்மன் தெருவில் முன்னாலேயே அங்காள பரமேஸ்வரி ஆலயம் இருக்கிறது.

"சிவசக்தியாக வந்த சக்திப் பாம்பே!
ஜீவன் முக்தி யளிக்க நல்ல பாம்பே!
மலையனூர் பதியினிலே தவமிருந்தாய்
மலைமகளே புற்றினுள்ளே நாகமுமானாய்
அங்காள ஈஸ்வரியே! அகிலாண்டேஸ்வரியே
ஓங்கார வல்லபியே! உலகாளும் நல்லவளே."

இங்கே சிலைவைத்து அதே ஆலயத்தின் பெயரை வைத்திருக்கிறார்கள் - புற்றில்லை.

# கோலவிழியம்மன்

மயிலையிலே எல்லையிலே கோல விழியம்மன் என்ற காளிகோயில் இருக்கிறதென்று தொடக்கத்தில் கூறினோம். வடமயிலை கோபதி நாராயணஸ்வாமி செட்டித் தெருவில் எழுந்தருளியிருக்கிறாள்.

இது ஒரு எல்லைக் காவல் தேவதை.

அந்தக் காலத்தில் வெள்ளையர் ஆண்ட நாளில் நெருப்பு மிதிக்கும் திருவிழா நடைபெற்றதாம். அப்போது அந்த நெருப்பில் மிதித்து நடந்த பக்தர்களைப் போட்டோ எடுத்தானாம் ஒரு வெள்ளையன். உடனே அவன் கண்கள் பார்வை இழந்து விட்டனவாம்! உடனே வெள்ளைக்காரன் கதறியிருக்கிறான்.

**போட்டோ எடுத்ததில் என்ன பிழை?!**

உடனே கோவில் அர்ச்சகர் சொன்ன மாதிரி பிரார்த்தனை செய்து, மன்னிப்புக் கேட்டானாம். மன்னிப்புக் கொடுத்த அன்னை, கண் பார்வையையும் கொடுத்தாளாம். இதற்காக அந்த வெள்ளைக்காரத்துரை இந்தக் கோலவிழி அம்மன் உற்சவ மூர்த்தியை கோட்டைக்கே வரவழைத்து அம்மனுக்கு; புடவை, தாலி, சன்மானங்கள் எல்லாம் வழங்கி அன்னை அருளை வேண்டினானாம்.

இந்த வரலாற்றுக் குறிப்பு அரசு ரிக்கார்டுகளில் உள்ளதாம்.

இதைச் சொல்லும்போது இன்னொரு ஊரில் நடந்த அந்தக் காலச் சம்பவம் நினைவுக்கு வருகிறது.

இதே போல் ஆழமான குழியில் மரங்களைப் போட்டுக் கொளுத்திப் பரப்பி அதன்மீது பக்தர்கள் நடந்து போனார்களாம். அந்த வெள்ளைக்காரன்,

'நெருப்பின் மீது எப்படி நடக்கிறார்கள்?' என்று சந்தேகத்தோடு குனிந்து நெருப்பைப் பார்த்தானாம்.

அந்த நெருப்பையே, அம்மன் தன் கையால் தாங்கிக் கொண்டிருப்பது தெரிந்ததாம். 'அடடா! இதுவன்றோ அன்னை அருள்! பக்தர்கள் கால் சுடாமல் இருக்க தன் கரத்தில் அல்லவா நெருப்பை ஏந்திக் கொள்கிறாள்' என்று ஆச்சரியப்பட்டானாம்.

இப்படிப்பட்ட சிறுகதைகள் நிறைய உள்ளன.

**மசூதித் தெருவில் நாகாத்தம்மன்**

ஒரு பெரிய அரசமரம். அது பெரிய பணக்காரருக்குச் சொந்தமான இடத்தில் இருக்கிறது. ஒரு பெரியவர் அரசமரத்துப் பக்கம் போனார். அங்கே வேரிலே, ஒரு நாகம் ஆடிக்கொண்டிருந்துவிட்டு, அங்கிருந்த வளைக்குள் புகுந்துவிட்டது.

ஆ- ஆத்தாள் மாரியம்மன் இங்கே நாகாத்தம்மனாய் இருக்கிறாள் என்று உணர்ந்த பெரியவர், தென்னங் கீற்றுகளை வேய்ந்து குடிசையாக்கினார். கற்பூர தீபம் காட்டினார். மஞ்சள் குங்குமத்தைத் தெளித்தார்.

இப்படிப் பல நாட்கள் பல மாதங்கள் ஓடின.

இடத்துக்குச் சொந்தக்காரர் அந்தப் பெரியவரைக் கூப்பிட்டு, "இந்த அரசமரத்தை வெட்டிவிட்டு வீடுகட்டப் போகிறேன். ஆகவே இந்தக் கொட்டகையைப் பிரித்துவிடு" என்றார்

பெரியவருக்கோ ஒன்றும் புரியவில்லை.

"அம்மா! மகமாயி! மாரியம்மா! நாகத்தின் உருவிலே குடியிருக்கும் நாகதேவதையே! உன்னை வணங்க நினைத்தேன். உன் ஆளுகையை இங்கே ஒளிபரப்பலாம் என்றிருந்தேன். மரத்தை வெட்டப் போகிறார்களே-

என்ன செய்வேன்? எல்லாம் உன் செயல்" என அழுது கண்ணீர் சிந்தினார்.

அடுத்த சில நாட்களில் அந்தப் பணக்காரர் காசிக்குப் புறப்பட்டார். புறப்படும்போது அவரின் மனைவி பூர்ண கர்ப்பிணி. கர்ப்பிணி பிரியாவிடை கொடுக்கக் காசிக்குப் போனவர் திரும்பவே யில்லை.

அங்கேயே காலமாகிவிட்டார் என்ற தந்திதான் வந்தது.

கர்ப்பிணித்தாய் கதறினாள். அழுதாள். கண்ணீர் சிந்தினாள். ஒரு நாள் பிரசவம் ஆயிற்று.

அந்தப்` பிரசவத்தில் ஓர் ஆண் குழந்தையோடு ஒரு பாம்பும் பிறந்தது! அதைக் கண்டு அலறினாள் தாய். பிரசவம் பார்க்க வந்தவர்களும் பயப்பட்டார்கள்.

அப்போது ஒருவர்மீது 'மருள்'வந்து,

"உன் கணவன் 'இந்த மரத்தை வெட்டப்போகிறேன், கோயிலைப் பிரித்து விடு' என்றான். நாகாத்தம்மன் குடியிருக்கும் இந்த அரசமரம் சக்தி வாய்ந்தது. ஆகவே இந்த மரத்தை வெட்டக் கூடாது என்பதற்குத்தான் அடையாளமாகக் குழந்தையோடு பாம்பும் பிறந்திருக் கிறது" என்றது.

பிள்ளை பெற்ற மகராசி உணர்ந்தாள். அரச மரத்தை வெட்டக்கூடாது என்ற முடிவுக்கு வந்தாள்.

பிள்ளையோடு பிறந்த நாகம் இறந்து விட்டது.

அரச மரமும் பிழைத்தது. அழகான ஆண் பிள்ளையும் பிழைத்தது. அவளே அந்தக் கோவிலை அரசமரத்தை உள்ளே வைத்துக் கட்டிவிட்டாள். இப்போதும் சென்னை மயிலாப்பூரில் கபாலீஸ்வரர் கோயிலுக்கு அருகாமையில் மசூதித் தெருவில் நாலாம் நெம்பர் இடத்தில் அந்த அரசமரமும் நாகாத்தம்மன் திருக் கோயிலும் இருக்கின்றன.

ஆடி வெள்ளியில் அருமையான திருவிழா.

சார்ந்துள்ள பெண்களும் தாய்மார்களும் சூழ வந்து பாலாபிஷேகம் செய்வதும் செவ்வாய் வெள்ளிகளில் அபிஷேக தீபாராதனை செய்வதும் கண்கொள்ளா காட்சி.

**தண்டு மாரியம்மன்**

மயிலாப்பூருக்குப் பக்கத்திலே மந்தவெளி - மந்தவெளி மார்க்கட்டுக்கு எதிரிலே ஒரு மாரியம்மன் கோயில் அதற்கு, தண்டு மாரியம்மன் கோயில் என்று பெயர். இந்த தண்டுமாரி மிகவும் சக்தி வாய்ந்தவள். மயிலாப்பூர் பகுதியைச் சார்ந்த மக்களின் எவ்வளவோ பிணிகளைத் தீர்த்து வைத்தவள் தண்டுமாரி என்று புகழ்ந்து பேசுகிறார்கள்.

கண்பார்வையில்லாத ஒரு பெரியவருக்குப் பார்வை வந்ததே இந்த அம்மனின் கருணையால்தான். அங்கே ஒரு கிராமணியார் பூஜை நடத்தி வருகிறார். அவர் பெயர் தெரியவில்லை. அவர் வருகின்ற பிணியாளர்க்கு வேப்பிலைப் பாடம் போடுவது, சீட்டு எழுதுவது, முடிகயிறு போடுவது வழக்கம்.

**இதோ ஒரு நாகம்மன்**

சென்னை வால்டாக்ஸ் ரோடின் கிழக்கு சரகத்தில் அரசமரத்தடியில் ஒரு கோயில். அதனுள்ளே கருவறையில் புற்று இருக்கிறது. அதில் நல்ல பாம்பாய் அம்மன் இருப்பதாகச் சொல்கிறார்கள். இவளும் சக்தி வாய்ந்தவள்தான். சுமார் நாற்பது ஆண்டுகளாக இந்தக் கோயில் இருக்கிறது. இது ஒரு சிறிய சக்தி பீடம்.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி தொழுதால் நாகம்மன் எல்லா நலமும் தருவாள்.

**பெரிய பாளையத்தம்மன்**

சென்னையில் தங்கசாலை பஸ் நிலையத்திலிருந்து இருபத்தைந்து மைல் தூரத்தில் பெரியபாளையம் இருக்கிறது.

இங்கே ஒரு பழக்கம். பக்தர்கள் குளித்துவிட்டு ஆடைகளை நீக்கிவிட்டு வேப்பிலை ஆடைகளைக் கட்டிப் பிரார்த்தனை செய்கிறார்கள். இது ஒரு கிராம தேவதைதான். பெரியபாளையம் சிறிய கிராமம்தான். இருந்தாலும் பவானியம்மன் கோயிலினால் பெருமை பெறுகிறது.

ஆரணியாற்றின் கரையிலே இந்தக் கோயில் கட்டப்பட்டிருக்கிறது. இங்கு மாங்காடு காமாக்ஷி கோயிலுக்கும் திருவேற்காடு கருமாரியம்மன் கோயிலுக்கும் பக்தர்கள் கூட்டம் திரள்வது போல் பாளையத்தம்மன் ஆலயத்திற்கும் கூட்டம் பெருகுகிறது.

**பவானி அன்னை**

"பால்வேண்டு மென்றழுதேன்
பால் கொடுப்பதுன்கடமை
பாவையே! பவானித்தாயே
பரிவோடு எடுத்தணைத்தாய்"

அப்படிப் பரிவோடு எடுத்தணைப்பவள் பவானித்தாய். அந்த மகா சக்தி அன்னையாய், அமுதமாய், அறிவாய், ஆற்றல் மிகு ஒளியாய், ஊக்கமாய், ஞானமாய், ஞாயிறாய் போற்றிப் போற்றித் துதிக்கப்படுகிறாள். தனது மாயாசக்தியால் மாரியம்மனாகப் பவானித்தாயாக, ஆதிசக்தி நாயகியாகக் கருமாரி அன்னையாக, உருமாறி ஒவ்வொரு திருத்தலத்தில் ஒவ்வொரு நாமத்தோடு ஒளிர்கின்றாள் அன்னை மகாசக்தி.

அப்படிப்பட்ட தலங்களில் பிரசித்தி பெற்றது, விந்தியாசல் என்ற சக்தி பீடம்.

இவளை ஆதிசக்தி, பவானி, விந்தியேசுவரி என்றும் அழைப்பார்கள்.

முன்பு மாயாவாக கம்சனுக்கு எதிரியாக மாயா அவதரித்து விசுவரூபம் எடுத்துக் கம்சனை எச்சரித்துப் போனதாக நாம் கூறிய வரலாற்றுத் தொடர்புமிக்க இடம் இது.

இந்தத் தலத்தில் ஒரு சிறப்பு.

மகாகாளி, மகாசரஸ்வதி. மகாலக்ஷ்மி. இவர்களின் திருக்கோவில்கள் மூன்று திசைகளில் இருக்கின்றன.

இது பற்றிய புராணக் கதைகள்

**பிரம்மனின் சக்கரம்**

கலியும் தொடங்கியதும் தீமைகள், பகை, பொய், பொறாமை, விபசாரம், சூது போன்ற தீய சக்திகள் உருவாகின்றன என்று பல மகரிஷிகள் எல்லோரும் கூடி பிரம்மதேவனிடம் முறையிட்டனர்.

பிரம்மா பிரசன்னமானார். "முனிசிரேஷ்டர்களே! உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?" எனக் கேட்டார்.

"நான்முகனே! கலியுகத்தீமைகள் எங்களைப் பற்றாத ஓர் இனிய இடம் வேண்டும். நாங்கள் தவம் செய்வதற்கு" என்று கேட்டனர்.

"முனிவர்களே! இதோ இந்த சக்கரத்தை உருட்டிச் சுழலும்படி செய்கிறேன். அது பல தடைகளையும் அறுத்தெறிந்து பாய்ந்தோடித் தானாகவே நின்றுவிடும். அந்த இடமே உங்களுக்குத் தேவையான (தீமைகள் அணுகா) திவ்ய பிரதேசம்" என்றார்.

அவ்வாறே சக்கரத்தை ஏவினார். மகரிஷிகளும் அதனுடனேயே புறப்பட்டுப் போயினர்.

சக்கரம் செயலற்று நின்ற இடமே நைமிசாரண்யம் என்பது.

அந்தத் திவ்ய பிரதேசத்தில் திவ்ய மங்களமாக மகரிஷிகள் தங்கித் தவமியற்றத் தொடங்கினர்.

அந்த முனிவர்களுக்கு வேத வியாசரின் மாணாக்கர் சூதர் என்பவர் புராணங்களைச் சொல்லிவரும்போது, நைமிசாரண்யத்தைப் பற்றிச் சொல்லத் தொடங்கினார்.

"இந்த வரலாறு எனக்கு எப்படித் தெரியும் எனக் கேட்பீரானால்? -

மகாவிஷ்ணுவுக்கு சிவபெருமான் சொல்ல, அவர் நாரதருக்கு உரைக்க, நாரதர் எனக்குச் சொல்ல, நான் உங்களுக்குச் சொல்கிறேன்" என்று சொல்லப்போனார்.

"தாரகாசுரன் என்பவன் சிவபிரானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். அவனது கடுமையான தவத்திற்கு மனம் இரங்கித் தாரகேசுவரர் பிரசன்னமானார்.

**இவனும் மனிதனானான்**

"என்ன வரம்வேண்டும்?" என்று கேட்டார்.

"இறைவா! இந்தப் புனித மண்ணின் தன்மையால் என் அசுரத்தன்மை நீங்கி நான் புனிதனானேன். ஆகவே இப்போது சராசரி மனிதன். என் சுயநலத்திற்காக வரம் கோர மாட்டேன். இங்கே என் பெயரில் ஒரு நீர்ச்சுனை ஏற்படவேண்டும். அந்தச் சுனைக் கரையில் அமர்ந்து தவம் புரிவோர்க்கு சீக்கிரம் தவசக்தி சித்திக்க வேண்டும். இதுவே நான் யாசிப்பது!" என்றானாம்.

சிவபெருமானும் அதே வரத்தை அளித்தாராம். ஆகவே

மகரிஷிகளே நீங்கள் தேர்ந்தெடுத்த இடம் மிக மகிமை பொருந்திய இடம்" என்றார்.

அங்கே,

"தர்மேஸ்வரர்"
"தோதர்னேஸ்வரர்"
"பிருங்கிஸ்வரர்"
"சதுர்வேதேஸ்வரர்"
"அஷ்டதசாங்கு வேஸ்வரர்"
"ரத்தினேஸ்வரர்"
"சாரஸ்வதேஸ்வரர்"
"தீர்த்தேஸ்வரர்"
"மகேசுவரர்" என்ற பெயருள்ள லிங்கங்கள் இருக்கின்றன.

இங்கே நடுநாயகமாக கொலுவீற்றிருப்பவர் விந்தியாவாசினி என்றழைக்கும் பவானி அன்னை.

இவளே கருமாரியாக ஒளி பெறுகிறாள் என்றால் ஆச்சர்யப்படத் தேவையில்லை.

"பூத்தவளே! புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே! பின் கரந்தவளே! கறைகண்டனுக்கு
மூத்தவளே! என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே!
மாத்தவளே! உன்னையன்றி மற்று ஓர் தெய்வம்
வந்திப்பதே"

இது அபிராமி அந்தாதி.

மாரியம்மன் வழிபாடு நம் நாட்டில் கிராமங்களில், ஏராளமாக உள்ளது. மகிஷாசுரனை வதம் செய்ய மும்மூர்த்திகளால் முடியாது போனதால் அவர்கள் மூவரின் சக்தியால் உருவாக மாறியவள் மாரி. அந்த சக்திதான் ஆதிசக்தியின் அம்சமாகி மகிஷாசுரனை சம்ஹரித்தவள்.

மாரி, மகமாயி, மகாமாயி, ரேணுகாதேவி, சீதளதேவி, கங்கையம்மா, முத்தம்மா, முத்தாலம்மா என்றெல்லாம் அழைக்கப்படுகின்றாள்.

**ரேணுகாதேவி**

இவள் மகமாயி, சீதளாதேவி வரிசையில் இருக்கிறாள். இவளைப்பற்றிய சிறு குறிப்பு இதோ.

ஜமதக்னி முனிவரின் மனைவி ரேணுகா தேவி. இவர்களுக்குப் பரசுராமன் முதல் சில பிள்ளைகள் இருந்தனர்.

ஒரு முறை கார்த்தவீரியார்ச்சுனன் என்பவன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான், தன் படை பரிவாரங் களோடு -

இவன் இராவணனைப் போரில் வென்ற சிறந்த வீரன்! ஸ்ரீமன் நாராயணனுடைய அம்சமான தத்தாத்ரேயரைப் பக்தியுடன் உபசரித்து ஆசிகளைப் பெற்ற பக்திமான்.

வேட்டையாடிவிட்டுக் களைத்துப்போய் அருகில் இருந்த ஜமதக்னி ஆசிரமத்திற்குப் பரிவாரத்தோடு போனான் மன்னன்.

மன்னனும் அவன் பரிவாரங்களும் பசியால் களைத்துப்போய் வந்ததால், ஜமதக்னி முனிவர் அவர்களை வரவேற்றுப் பசியாற்ற வேண்டுமே என்று யோசித்துக் கேட்டதைக் கொடுக்கும் காமதேனுவின் உதவியால் உணவுப் பொருட்களை வரவழைத்து அனைவருக்கும் உணவு படைத்து அவர்கள் பசியையும் களைப்பையும் போக்கினான்.

பசியாறிய மன்னன் கார்த்தவீரியார்ச்சுனன் காமதேனுவின் சிறப்பை அறிந்ததால் அதைக் கவர்ந்து. செல்லத் திட்டமிட்டான்.

முனிவரும் குளிக்கப் போனார்.

ரேணுகா தேவியும் எதோ வேலையாய் வெளியே போயிருந்தாள்.

பிள்ளைகளும் இல்லை. இந்த நேரத்தில் குறிப்பாகப் பரசுராமன் இல்லை.

ஆகவே யாருக்கும் தெரியாமல் காமதேனுவைக் கடத்திக்கொண்டு போய்விட்டான் மன்னன்.

முனிவர் வந்தார். ரேணுகா தேவி வந்தாள். பிள்ளைகள் வந்தார்கள். காமதேனுவைக் காணவில்லை எனக் கண்டு எங்கும் தேடிப்பார்த்தார்கள்.

பிறகுதான் புரிந்தது மன்னன் களவாடிப் போயிருக்கிறான் என்று.

**போர்க்கோலம் பூண்டான்**

பரசுராமன் கிளர்ந்தெழுந்தான். வில்லையும், கோடாலியையும் எடுத்துக்கொண்டு நாட்டிற்குப் புறப்பட்டான்.

மன்னனின் தலைநகரம் மாகிஷ்மதியாகும்.

மன்னன் நால்வகைப் படைகளுடன் மோதினான். பரசுராமன் தவவலிமையினால் மன்னனின் படைகளைச் சின்னா பின்னமாக்கி மன்னனையும் கொன்று காமதேனுவைக் கைப்பற்றிவந்து தந்தையிடம் சமர்ப்பித்தான்.

"தந்தையே மன்னனைக் கொன்று காமதேனுவை மீட்டு வந்தேன்" என்றான்.

மகிழ்ச்சி அடைவதற்கு மாறாக ஜமதக்னி முனிவர் வருந்தினார்.

"மகனே பரசுராமா! இது மகாபாதகம். மன்னனைக் கொன்றது அடாத செயல். இந்தப் பாவத்தைப் போக்கப்

பல புண்ணிய நதிகளுக்குச் சென்று நீராடிவா" என அனுப்பினார்.

பரசுராமனும் புறப்பட்டான்.

ஓர் ஆண்டு தீர்த்தயாத்திரை முடிந்து ஆசிரமம் வந்து சேர்ந்தான் பரசுராமன்.

**சபலம் ஏற்பட்டது சங்கடமும் ஏற்பட்டது**

ஒரு நாள் ரேணுகாதேவி நீர் கொண்டு வர கங்கைக்குச் சென்றாள். அப்போது கந்தர்வர்கள் ஆகாய மார்க்கமாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களின் பிம்பம் நீரில் தெரிந்தது.

'ஆஹா! என்ன அழகான கந்தர்வர்கள்" என அவர்கள் அழகை ரசித்து மனம் பறி கொடுத்தாள் ரேணுகாதேவி.

ஒரு சிறு சபலம் என்னென்ன வேதனையை ஏற்படுத்தப் போகிறது என்பதையறியாத ரேணுகா தண்ணீர் முகந்து கொண்டு புறப்பட்டாள்.

பூஜைக்கு நேரத்தோடு மனைவி வராததால் ஞான திருஷ்டியால் என்ன நடந்தது என்று ஜமதக்னி முனிவர் பார்த்தார்.

தன் மனைவி கந்தர்வர்களைத் தண்ணீரில் பார்த்து அவர்கள் அழகில் சபலித்து மயங்கி நின்றாள் என்பது புரிந்தது.

ஒரு கற்புடைய மங்கை வேறு ஆடவனை மனத்தால் எண்ணுவதே கற்பிழந்தமைக்கு அடையாளம் என்பதை உணர்ந்த முனிவர், பிள்ளைகளை அழைத்து மனத்தால் சோரம் போய்விட்ட அன்னையைக் கொன்று விடுங்கள் என ஆணையிட்டார்.

பிள்ளைகளோ தாயைக் கொல்ல மனமின்றிப் பின்வாங்கினர். தந்தையின் கட்டளையை ஏற்க மறுத்தனர்.

**தந்தை சொல் மிக்க மந்திரமில்லை**

அப்போது வந்த பரசுராமனை அழைத்தார் முனிவர்.

"மகனே பரசுராமா!"

"தந்தையே! அழைத்தீர்களாமே?"

"ஒரு பெண் தன் கணவனிருக்கும்போது பிற ஆடவர் அழகில் மனம் பறி கொடுப்பது தர்மமாகுமோ?"

"உடலால் சோரம் போவதைவிட உள்ளத்தால் சோரம் போவது மகாபாவம். கணவனுக்குச் செய்யும் துரோகம். கற்பு நிலையிலிருந்து அவள் மாறுபடுகிறாள்."

இப்போது, ராமன் சீதையை மணக்கும்போது சொன்ன வாசகம் நினைவுக்கு வருகிறது பரசுராமனுக்கு. 'ஜனகனின் மகளே சீத்தா! இந்த ஜென்மத்தில் உன்னைத் தவிர வேறு யாரையும் மனத்தாலும் தீண்டேன். உடலாலும் தீண்டேன்' என்று சொன்னதிலிருந்து மனத்தால் சபலப்படுவதும் குற்றமே என உணர்ந்திருந்தாள்.

"அப்படியானால் ஆகாய மார்க்கமாகப் போன கந்தர்வர்களின் அழகு, நீரிலே தெரிந்ததைப் பார்த்துச் சபலத்தால் சற்று மயங்கி நின்றுவிட்ட எனது மனைவியை, - உனது தாயை அதாவது ரேணுகாதேவியை - கொன்று வா! அத்துடன் என் ஆணைக்குக் கட்டுப்படாமல் அவமதித்த உன் சகோதரர்களையும் கொன்றுவிடு" என்றார்.

தந்தை சொல்லை மந்திரமாகக் கொண்ட பரசுராமர், உடனே தாயையும் சகோதரர்களையும் அழைத்துப்போய் கொன்றுவிட்டுத் தந்தையிடம் வந்து விபரம் தெரிவித்தான்.

**இவன்தான் மைந்தன்**

"அப்படியா! நீதான் என் மகன். உனக்கு என்ன வரம் வேண்டும் கேள், தருகிறேன்" என்றார் ஜமதக்னி முனி.

"தந்தையே! இறந்து போன தாயையும் சகோதரர் களையும் உயிர்ப்பித்து வாழச்செய்யுங்கள். நான்தான் கொன்றேன் அவர்களை என்பது அவர்கள் நினைவில் இல்லாமல் செய்து விடுங்கள். அதுவே எனக்கு நீங்கள் தரும் வரம்" என்றான்.

அப்படியே மனைவி மக்களை எழுப்பித் தந்தார்.

கொஞ்ச நாள் சென்றதும் ஜமதக்னி இறந்து போனார். கணவன் இறந்துபோனதும், காஞ்சிபுரம் வந்து தவம் செய்யலானாள் ரேணுகா.

நீண்ட நாள் தவம் செய்தபின் சிவபிரான் அவள் முன்தோன்றி,

"ரேணுகாதேவி! நீ தெய்வம் போல் மக்களுக்குக் கேட்டதைக் கொடுக்கும் ஆற்றலைப் பெற்றுவிட்டாய், என் சக்தியாலும் ஆதிசக்தியாலும். ஆகவே நீ சிவகணங்கள் புடைசூழ தேவதையாய் இருந்து மக்களை வாழவை" என்றார்.

அதுமுதல் ரேணுகாதேவி சர்ப்ப குண்டலமும் கேடயமும் கத்தியும் தாங்கித் தெய்வ தேவதையாக அமர்ந்தாள்.



## எங்கெங்கும் சக்தியடா!

கருமாரியம்மன் ஆலயங்கள் எங்கெங்கே இருக்கின்றன? ஆவடியைச் சேர்ந்த திருவிளஞ்சியத்தில் சமீபத்தில் இதே பெயரில் கோயில் கட்டப்பட்டுள்ளது.

இத்தலத்தில் ஒரு சிறப்புண்டு.

சித்தாஸ்ரமம் என்ற பெயர் கொண்டது இந்தத் தலம். காச்யப முனிவர் தவம் இயற்றிய இடம். இந்த ரிஷியின் தவத்தினால் மகிழ்ந்து பார்வதிதேவி கருமாரியாகக் காட்சியளித்தாள் என்று சொல்கிறார்கள்.

- செவிவழிச்செய்தி

எண்ணூரில் கருமாரியம்மனுக்கு ஆலயம் கட்டப்பட்டுள்ளது.

சென்னையில் மேற்கு மாம்பலத்தில் சாமியார் தோட்டம் எனப்படும் பகுதியில் கருமாரி ஆலயம் எழுப்பப்பட்டுள்ளது. இங்கும் குறி சொல்லப்படுகிறது.

## சமயபுரத்திலே ஓர் மகமாயி

சமயபுரம் திருச்சியிலிருந்து பதினைந்து கிலோ மீட்டர் பெரம்பலூர் செல்லும் பாதையிலுள்ளது.

இந்த இடம் அந்தக் காலத்தில் கண்ணனூர் என்று வழங்கப்பட்டது.

ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயிலில் வைஷ்ணவி என்ற பெயரில் இந்த அம்பாள் கோயில் கொண்டிருந்தாள். இவள் மிக உக்கிரமாய் இருந்ததால், இந்த விக்கிரகத்தை அகற்றிக் கண்ணனூரில் கொண்டுவந்து வைத்து விட்டார்களாம்.

கண்ணனூர் மாரி என்றே இவளை எல்லோரும் வழிபட்டு வந்தனர்.

"கண்ணனூர் மாரிமுத்தே கலகலென நடனமிடும்
உன்னைப் பணிந்தவர்க்கு உற்றதுணை நீயிரம்மா
சமயபுரத்தாளே! சாம்பிராணி வாசகியே!
சமயபுரத்தை விட்டுச் சங்கரியே வாருமம்மா
படவேட்டமர்ந்தவளே! பரசுராமனைப் பெற்றவளே!
படவேட்டை விட்டு, மெள்ளப் பத்தினியே வாருமம்மா
இருந்தாய் சமயபுரம் இனிதிருந்தாய் கண்ணபுரம்
கண்ணபுரத் தெல்லைவிட்டுக் கமலாசினி வாருமம்மா"

**இன்னொரு செய்தி**

ஹொய்சள மன்னன் வீர மகேஸ்வரனால் வழிபடப்பட்டு, அவனால் கோயில் கட்டிப் பிரதிஷ்டை செய்யப்பட்டவள். இந்த ஆலயம் அழிந்துவிடவே மதுரையை ஆண்ட விஜய ரங்க சொக்க நாதர் 1736ம் ஆண்டில் இப்போதுள்ள கோயிலைக் கட்டுவித்தார்.

சமயபுரத்து மாரியம்மன் சிலை மிகப் பெரியது. அதை, சில மூலிகைகளால் ஆன திருவுருவச் சிலை ஆனதால் கற்பூர ஆரத்தியை அருகில் காட்டமாட்டார்கள்.

சமயபுரத்து மகமாயி சக்தி மிக வாய்ந்தவள். அம்மை முத்துமாரி அழகான கண்ணுடையாள். ஆயிரம் கண்ணுடையாள் அலங்காரி அவள் ஆணவத்தைப் போக்கக்கூடியவள்.

## பண்ணாரி மாரியம்மன்

கொங்கு நாட்டில் ஒரு சக்திபீடம். சம்பம் மலைச்சாரலில் வாணியாற்றங்கரையில் கோயில் கொண்டிருப்பவள் பண்ணாரி மாரியம்மன்.

"வேதாந்த நாயகியே! வினைதீர்க்கும் வித்தகியே!
விண்ணவர்கள் குறை தீர்த்த வேதவல்லி நீயம்மா
பண்ணாரிமாரிமுத்தே! பேச்சியெனும் மாரியரே
கண்ணனூர் மாரிமுத்தே! கண்ணழகி வாருமம்மா
மலையனூர் எல்லையிலே மகமாயி கொலு விருந்தாய்
பெரியபாளையத்தமர்ந்த மாதாவே மாரியம்மா"

சத்திய மங்கலத்திலிருந்து மைசூர் செல்லும் பாதையில் பத்து கிலோமீட்டர் தூரத்தில் இந்த ஆலயம் உள்ளது.

இங்கே ஏழு சக்திகள் என்றும் கொலுவீற்று இருக்கிறார்கள்.

"பாரியூர் கொண்டத்து மாரியம்மன்"
"அந்தியூர் பத்திரகாளியம்மன்"
"பவானி செல்லாண்டியம்மன்"
"வடக்குப் பேட்டைத் தண்டு மாரியம்மன்"
"பண்ணாரியிலேயுள்ள சருகுமாரியம்மன்"
"பண்ணாரி மாரியம்மன்"
"பண்ணாரி சுயம்பு மூர்த்தி"

இங்கே சிறப்பான திருவிழா நடக்கிறது. தீமிதி வைபவமும் உண்டு.

## மாங்காட்டில் மாரியம்மன்

"மாங்காடு மாரியம்மா மனதுவைத்துக் காருமம்மா
ஏங்கவைக்காதே எழில்மகளே
ஏற்றம் வைத்துக் காருமம்மா..."

சிவபெருமானும், சக்தி உமையவளும் சந்தோஷமாய் உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது மகிழ்ச்சி மேலிட்டால் சிவனின் கண்களை இரு கரத்தால் மூடினாள் சக்தி.

அப்பப்பா!

கண்கள் சந்திர சூரியர்களல்லவா?

உலகமே இருண்டது. எல்லாம் ஸ்தம்பித்து விட்டன. உடனே சிவனுக்கே கோபம் வந்து விட்டது.

"பூலோகத்தில் போய்த் தவம் செய்து என் இடப் பாகம் சேர்வாய்" என்று சபித்துவிட்டார்!

பூலோகத்திலே மாங்காடு என்ற இடம் காமாட்சியாய் வந்தாள்.

அவள் பாதம் பட்ட அக்கணமே அந்தப் பூமி சொர்க்க லோகமாயிற்று. புல் பூண்டுகள் செடி கொடிகள் பூத்துக் குலுங்கின.

"ஆதியில் காமாட்சி அன்னை சிரிக்கின்றாள்
மாங்காட்டு எல்லையிலே - அவள்
ஊசி முனையிலே விரலூன்றி நிற்கின்றாள்
ஐவகை நெருப்பினிலே
மைவிழி மாது அவளே"

தனது இடது கால் கட்டை விரலின் நுனிப்பகுதி அக்னியில் படும்படியும், வலது காலை மடித்து இடக்காலின் தொடைக்குச் சற்று மேற்புறத்தில் இருக்குமாறும், இடது கையை நாபிக்கமலத்தில் சற்று மேற்புறமாகவும் வலது கையில் ஜபமணியுடன் தன் சிரசின் மேலும் வைத்துக் கண்களை மூடி ஐவகை நெருப்பினிடையே தவமியற்றினாள், அன்னை தவக்கோலக் காமாட்சி.

கடும் தவம்.

சிவபிரானின் உள்ளம் பேதலித்தது.

சக்தியில்லாததால் வேதனை. உடனே புறப்பட்டார். வந்து காட்சி தந்தார்.

இது வரலாறு.

ஐந்தணலில் இருந்து தவம் செய்ததால் உக்ரம் தாங்கமுடியாத நிலையிலே கோயில் கர்ப்பகிரஹம் அமைந்ததால் எங்கும் திட்சண்யம் ஒரே தகிப்பு.

மக்கள் தகிப்புத் தாங்க முடியாமல் ஊரைவிட்டே வெளியேற நினைத்தனர். இந்த நிலையிலே யாத்திரையாக வந்தார் ஆதிசங்கரர்.

எட்டு மூலிகைகளால் ஆன அஷ்ட கந்தம், அர்த்தமேரு என்னும் ஸ்ரீ சக்கரத்தை பிரதிஷ்டை செய்தார். உக்ரம் தணிந்து சாந்தமாயிற்று.

மாங்காடு என ஏன் பெயர் வந்தது?

மாந்தோப்புகள் அதிகம் உள்ள பிரதேசம். ஆதலால் அப்பெயர் வந்தது.

**செவிவழிக் கேட்டது**

இன்னொரு செவி வழிக்கதை.

காமாட்சி அங்கே தவமிருக்கும்போது மாட்டிடையன் மாடுகளை மேய்த்துவந்தான். ஒரு பசுமாடு காமாட்சிக்குப் பாலைக் கறந்துவிட்டுப் போனது. மாட்டுச் சொந்தக்காரன் பால் இல்லாததால் வெகுண்டு இடையனைத் துன்புறுத்தினான். காமாட்சி இடையனிடம் சொல்ல வேண்டாம் என்று சொன்னாளாம். மாட்டுக்குச் சொந்தக்காரன் அடித்துத் துன்புறுத்தவே உண்மையைச் சொல்லிவிட்டான்.

அதனால் இடையர்களே இல்லாமல் போய்விட்டது. மாங்காட்டில் இடையர் குலமேயில்லையாம். இது ஒரு கதை.

எப்படியோ மாங்காடு காமாட்சி மாரியம்மனாய், பிணி போக்க வல்லவளாய், வினை தீர்க்கும் வித்தகியாய் கருமாரியாகவும் காட்சியளிக்கிறாள்.

## பொள்ளாச்சி மாரியம்மன்

பொள்ளாச்சியில் ஒரு மாரியம்மன் கோவில். மிக அருள் பாய்ந்தவள். தேவியின் திருப்திக்காகப் போகிற பக்தர்கள் தங்களை உடலைச் சாட்டையால் அடித்துக் கொள்வது பழக்கம். இதற்காக இக்கோவிலில் பலதரப்பட்ட சாட்டைகள் வைக்கப்பட்டுள்ளன. ஆவேசம் வந்து ஆடுபவர்களுக்குக் கோமரம் என்று பெயர். அவர் பயங்கரமாக ஆடிக் குதிப்பார்.

நெருப்புச் சட்டியைக் கையில் ஏந்தி மார்போடு சேர்த்து அணைத்துக்கொண்டு 'மாரியம்மா மாரியம்மா' என்ற கோஷத்தோடு கோவிலை வலம் வருவது ஒரு பிரார்த்தனை. இந்த நெருப்புச் சட்டிக்குப் பூவோடு என்று பெயர்.

கோயிலை வலம் வரும்போது பூவோட்டைக் கீழே வைக்கக்கூடாது. பூவோட்டை ஏந்தி வருபவருக்கு மக்கள் நல்ல வரவேற்புத் தருவார்கள்.

காணிக்கை, பூமாலைகள், ஆடைகள், குளிர்ந்த பானங்கள் முதலியன வழங்குவார்கள். ஆக பக்தர்களின் குறையறிந்து அருள் பாலிக்கும் உள்ளங் கொண்டவள்.

"பார்த்தால் பசிதீரும்
பாவமெல்லாம் தீர்ந்துவிடும்
பரதவிக்கும் மானிடரைப்
பல்லாண்டு வாழவைப்பாள்.

செக்கச் சிவந்தவளே
 செங்காந்தள் மாதரசே
சீமாட்டி கொலுவிருப்பாய்
 சேர்விழியே உமயவளே

என்றும் அறிஞர்கள் பாடியுள்ளார்கள்.

## ஆனைமலை மாரியம்மா

ஆனைமலையில் ஒரு மாரியம்மன் கோவில். இது மிகவும் பிரசித்தி பெற்றது. அந்தக் கோவிலில் கருவறை பார்க்கப் பயங்கரமாக இருக்கும்.

பம்பை உடுக்கை சத்தம் கேட்டால் பாமரமக்களும் உடல் சிலிர்த்துக் கைகூப்பி நிற்பார்கள். எந்த வேண்டுதலையானாலும் உடனுக்குடன் தீர்த்துவைக்கும் உக்கிரமான ஒப்பற்ற மாரியம்மன்.

இங்கே அக்கினி குண்டத்தில் இறங்கி ஆடுவதுதான் முக்கிய சடங்கு.

## கோனியம்மன்

கோவை நகரில் அதாவது கோயம்புத்தூரில் காவல் தெய்வமாக சுமார் 500 ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டது. கோனியம்மன் கோயில் கோவன்புதூர் என்பதே கோயன்புத்தூராகியது.

இந்த கோனியம்மனாலே கோயம்புத்தூருக்குப் பெரும் சிறப்பு. இந்தக் கோனியம்மன் நோய் தீர்க்கும் வித்தகி. செல்வத்தை வாரி வழங்கும் ஆதிலெட்சுமியின் அம்சம்.

இவள் மாரியம்மனைப் போலவே சக்தி பீடத்தில் அமர்ந்து அன்பர்களுக்கு அருள் பாலிக்கிறாள்.

## கருவாளூர் மாரியம்மன்

இந்த மாரியம்மன் கருவாளூர் என்ற ஊரில் பெயர் காரணமோடு அமைந்திருக்கிறது. அவினாசியிலிருந்து ஆறாவது மைலில் இருக்கிறது.

இந்த அம்மன் கருவாளூர் என்ற ஊருக்கு ஏற்றபடி கருமாரி உருமாறுபவள் இந்த அன்னை. அழகிய கண்களை உடையவள்.

அவளுடைய அபிஷேகதீர்த்தத்தை கண்நோய் உள்ள கண்களில் விட்டால் கண்நோய் தீர்ந்துவிடும்.

"துன்பக் கடலினிலே எங்களையும் ஆட்டிவைத்து
கள்ளம் கபடமின்றி கரையினிலே ஒதுக்கியவள்
கருமாரியா இல்லை உருமாரியா
அல்லும் பகலும் நாங்கள் அலைந்து திரிந்த துன்பம்
கண்டு கண்டு உன்தன் மனம் இளகலையா?
களிப்படைய செய்ய ஓர் வழியில்லையா?

## ஈரோட்டு மாரியம்மன்

இங்கே சூலத்தைப் போல மூன்று மாரியம்மன் கோவில்கள் இருக்கின்றன. அவர்கள் பெரிய மாரியம்மன், சிறிய மாரியம்மன், வாய்க்கால்கரை மாரியம்மன் ஆவார்கள்.

இந்த முப்பெரும் சக்திகளும் ஈரோட்டின் முதுகெலும்பு போன்றவை. இவர்களுடைய உருவச் சிலைகளைப் பார்த்தால் இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்று தோன்றும்.

இங்கே மக்கள் வேப்பிலையையும் மலர்களையும் எலுமிச்சைப் பழங்கள் கோர்த்த மாலைகளையும் கொண்டு வந்து அம்மனுக்குச் சார்த்திவிட்டுப் பிரார்த் தனை செய்வது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

யார் எதை நினைத்து வந்தாலும் அதை அளிக்கும் சக்தி அந்த மூன்று மாரியம்மன்களிடத்தும் உண்டு. அம்மை வார்த்து விட்டால் குளித்து ஈரத்துணியுடன் கோயிலைச் சுற்றிப் பிரார்த்தனைக்கு வலம் வந்து, குழந்தையாக இருந்தால் வாழை இலையில் நெய் தடவி அம்மை வார்த்த குழந்தையைச் சந்நிதானத்திற்கு எதிரே கிடத்தி வேப்பிலையால் குழந்தை உடலைத் தடவிப் பிரார்த்திப்பார்கள்.

எப்படிப்பட்ட முத்தாக இருந்தாலும் இறங்கி அருள்பாலிப்பது அவளுடைய அருள் செயலாகும்.

"சொல்லித் தெரிவதில்லையே - நாங்கள்
செய்தபிழை என்னவோ
தவிக்கின்ற முல்லைக் கொடிபோல் - நாங்களம்மா
இதன் தரம் கண்டு உயிர்த் தருவதும் வேலையம்மா
வாடுகின்ற பிள்ளைகளைப் பாராயோ!
வந்து எங்கள் குறைகளைத் தீராயோ!
வாராயோ! வந்து தீராயோ!

என்று மக்கள் பாடி பிரார்த்தனை செய்யும் காட்சி காண்போர்களைப் புல்லரிக்கச் செய்யும்.

## கருவூர் மாரியம்மன்

ஆங்காரத்தோடு ஆரோகணித்து இருப்பவள் கரூரில் மாரியம்மன். இங்கே பக்தர்கள் திரண்டு வந்து கொண்டே இருப்பார்கள்.

அருள் மழைபொழிவதிலே இவளுக்கு நிகர் இவளேதான். பம்பையும், உடுக்கையும் எப்போதும் முழங்கிக் கொண்டே இருக்கும்.

உக்கிரமுள்ள தாயாக இருந்தாலும் அவள் அருள் பார்வை பட்டவிடமெல்லாம் தீவினை ஒழிந்து நல்வினைகள் செழித்தோங்குவதைக் காணலாம்.

குழந்தைப் பேறு இல்லாதவர்கள் கரூர் மாரியம்மனை தரிசித்தால் கருவிலே உருவாவாள் என்ற நம்பிக்கை பக்தர்களின் மனத்தில் பசுமரத்து ஆணிபோல் பதிந்து விட்டது.

கருவாகி உருவாகிக் காப்பவளும் நீயல்லவா?"

என்பது ஆன்றோர் மொழி.

## வண்டியூர் மாரியம்மன்

மதுரைக்கு அடுத்த வண்டியூரில் மாரியம்மன் கோயில் ஒன்று இருக்கிறது. இந்த அன்னை அருள் கனிந்த முகத்தோடு எல்லோரையும் வசீகரிக்கும் குணம் உடையவள்.

அன்னை மகா சக்தி உள்ளவள். அவள் பெயரைச் சொல்லி வேப்பிலையை எடுத்து முகத்தில் அடித்துப் பாடம் போட்டாலே எப்படிப்பட்ட பிணியும் விலகி விடும்.

அம்மனின் தலையில் எலுமிச்சம் பழத்தை வைத்து பம்பை உடுக்கை அடித்து வர்ணித்து அழைத்தால் எலுமிச்சம்பழம் தானே வலது பக்கம் இறங்கும்.

மாரியம்மன் உத்தரவு கொடுத்துவிட்டது என்று மகிழ்ந்து செவ்வாய்க்கிழமையிலும் வெள்ளிக்கிழமை யிலும் பொங்கல் இட்டு அவள் அருளைப் பெறுகிறார்கள்.

## நீடூர் ஆலாலசுந்தரி

நீடூர் என்ற ஊர் மாயவரத்தில் இருந்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. இங்கே பெயருக்குப் பொருத்தமில்லாத மாரியம்மன் கோயில் இருக்கிறது.

இவளுக்கு ஆலால சுந்தரி பெயர் உண்டு. இவள் ஓர் உக்கிர தேவதை. பெயரைப் பார்த்தால் சுந்தரமான அழகு உடையவள் என்று தோன்றும்.

ஆனால் ஆலால என்ற வார்த்தையைப் பார்க்கும் போது விஷத்தைப் போன்ற உக்கிரமானவள் என்றும் தெரிகிறது. ஆலம் என்றால் விஷம் என்று பொருள்.

இந்தக் கோவிலின் சிறப்பு, இங்கு நண்டு ஒன்று வழிபட்டிருக்கிறது. சாப விமோசனம் அடைந்து இருக்கிறது.

நீடூரைக் காக்கும் காவல்தெய்வம் இவள்தான். இந்தக் கோயில் வடக்கு நோக்கி இருக்கிறது.

## செங்கழுநீர் அம்மன்

பாண்டிச்சேரி கடற்கரைக்குச் சமீபத்தில் செங்கழுநீர் அம்மன் ஆலயம் ஒன்று இருக்கிறது.

இவளை முத்து மாரியம்மன் என்றும் அழைக்கிறார் கள். இங்கே பொங்கலிடுதல், தீ மிதித்தல், பாலாபிஷேகம், பஞ்சாமிர்த அபிஷேகம் இவை அடிக்கடி நடைபெறும்.

இங்கேயும் வேப்பிலைக்குச் சிறப்பு உண்டு. இன்னொரு சிறப்பு மகாகவி சுப்பிரமணிய பாரதியார் இவளை அடிக்கடி வந்து பாடித் தொழுது, சரணடைந்து இருக்கிறார்.

பாண்டிச்சேரியில் இந்தக் கோயில் ரொம்ப பிரசித்த மானது.

# புன்னை நல்லூர் மாரியம்மன்

இந்தப் பராசக்தி ஆயிரம் கண்ணுடையவள். இவள் புன்னை நல்லூரில் கொலு வீற்று,

ஆயிரங்கண்ணுடையாள்
அலங்காரி வாருமம்மா!

என்பது போல அருள் பாலிப்பவள். புன்னை நல்லூர் தஞ்சை நாகப்பட்டினம் சாலையில் உள்ளது.

இங்கே ஒரு வரலாறு.

தஞ்சையை ஆண்ட மன்னன் வெங்காவி மகாராஜா. இவன் இராமேஸ்வரத்திற்குப் போய்வரும்போது, சமயபுரத்தில் தங்கினான்.

அப்போது ஒரு கனவு.

அம்மன் அவன் கனவிலே தோன்றினாள்.

"மன்னா! நீ இருக்கும் இடத்திற்கு வெகு சமீபத்தில் புன்னைக் காட்டில் நான் இருக்கிறேன். என்னை எடுத்துக் கோயில் எழுப்பு" என்று கூறி மறைந்தாள்.

கண் விழித்த மன்னன் 'ஆகா, அற்புதமான கனவு!' என்று மறுநாள் காலையில் அன்னை குறிப்பிட்டபடி அருகாமையிலிருந்த புன்னைக் காட்டிற்குச் சென்று வீரர்களை விட்டுத் தேடினான்.

என்ன ஆச்சரியம்!

அம்பிகையின் அழகான சிலை ஒன்று இருந்தது. அதை எடுத்துக் கொண்டுபோய் ஆலயம் கட்டினான். அவனுக்குப் பிறகு பட்டத்திற்கு வந்த துளஜாஜி மகாராஜா இந்தக் கோயிலைப் பெரிதாக விரிவாக்கினார்.

தஞ்சாவூரில் கலெக்டராக இருந்த ஒரு வெள்ளைக்காரன் அம்மனைப் பற்றி அலட்சியமாகப் பேசினான். அவன் பெயர் வில்சன்.

அம்பிகையை அலட்சியப்படுத்திய வில்சனுக்கு அம்மை நோய் கண்டது.

"நிரபாரமான" அம்மை முத்துகள் வில்சனின் முகத்தில் இருந்து உள்ளங்கை வரை போட்டுவிட்டன. அம்மையின் உக்ரம் தாங்க முடியாமல் அலறித் துடித்தான்.

உடன் இருந்த தமிழ் மக்கள் அவனுக்கு வேப்பிலை கொண்டுவந்து போட்டு, நல் விளக்கேற்றி தினசரி காலையும் மாலையும் மாரியம்மன் தாலாட்டுப் படித்து, அம்மையை இறக்கினார்கள்.

ஆனால் அம்பிகையை அவமதித்த வில்சனின் கண் பார்வை போய்விட்டது.

வில்சன் பதறினான். ஐயோ என் இரு கண்களும் பார்வை இழந்துவிட்டனவே என்று கதறி அழுதான். பிறகு பெரியவர்கள் சொன்னார்கள்.

"வில்சன் துரையே! புன்னை நல்லூர் மாரியம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவள். அவளைத் திட்டியவர்கள், அலட்சியப்படுத்தியவர்கள், கேவலமாகப் பேசியவர்கள் யாரும் அவள் தண்டனையிலிருந்து தப்பிக்க முடியாது. நீங்கள் ஷூ போட்டுக்கொண்டு கோயிலுக்குப் போனீர்கள். 'இந்தக் கல்லில் என்ன இருக்கிறது?' என்று அலட்சியப்படுத்தினீர்கள். ஆகவே உங்களுக்கு அம்மை வார்த்தது. அதன் விளைவால் கண்பார்வை இழந்தீர்கள்.

ஆகவே அம்மனை வேண்டுங்கள். கண்ணீர் விட்டுக் கதறுங்கள். அப்போதுதான் மனமிரங்குவாள். கேட்டதைக் கொடுப்பாள். கண்பார்வை வரும். நீங்கள்

மறுபடியும் இவ்வுலகத்தைப் பார்ப்பீர்கள்" என்று சொன்னார்கள். இந்த சத்தியமான வார்த்தைகளைக் கேட்டதும், மனம் நெகிழ்ந்து கசிந்துபோன வில்சன் அன்றிலிருந்து அன்ன ஆகாரமின்றித் "தாயே மாரியம்மா! நான் அறியாமல் செய்த பிழையைப் பொறுத்தருள் தாயே! உன் மகிமை புரியாமல் நான் ஏதேதோ பேசிவிட்டேன். தவறிழைத்து விட்டேன். என்னை மன்னித்துவிடு தாயே! என் கண்களைத் திறந்துவிடு," என்று அழுது, தொழுது, வேண்டினான்.

பகைவர்களுக்கும் மனம்இரங்கும் அன்னை வில்சனுக்கும் கண் பார்வையை அளித்தாள். இந்தச் சம்பவம் இந்தக் கோவிலில்தான் நடந்தது.

இந்த விஷயத்தைத் தன் குறிப்புப் புத்தகத்தில் எழுதி உள்ளான்.

இதே ஊரில் அருள்மொழித் தேவர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு வைசூரி கண்டது. அது அம்மை என்பது அறியாமல் மருந்து சாப்பிட்டுப் பார்த்தார். குணமாகவில்லை. பிறகுதான் புரிந்தது. இது அன்னையின் உக்ரமான முத்துக்கள், வைசூரி என்று. உடனே அன்னை மீது பாரத்தைப் போட்டுப் பிரார்த்தித்து வேப்பிலை கொண்டு தடவி மாரியம்மன் தாலாட்டுப் படித்து அம்மை இறங்கியது.

இதைக் கண்ட அருள்மொழித் தேவர் தனது சொத்துக்களை கோயிலுக்கே எழுதி வைத்துவிட்டார். அப்படிப்பட்ட அருள்பாலிக்கும் அம்பாள் இவள். அவர் அளித்த நிலத்தில் உருவான கோயிலும் ஊரும் அருள் மொழிப்பேட்டை என்றாயிற்று.

## நாடியம்மன்

பட்டுக்கோட்டை என்றொரு ஊர். அது தஞ்சை மாவட்டத்தில் இருக்கிறது. அங்கே நாடியம்மன் என்ற ஒரு மாரியம்மன் கோயில் இருக்கிறது.

இவள் மிக சக்தி வாய்ந்தவள். இவள் ஒரு பக்தரின் கனவில் தோன்றி 'எனக்கு வரகு அரிசி' மாலையே இஷ்டம் என்றாளாம். அதேபோல் வரகு அரிசியில் மாலை கட்டிப் போட்டார்களாம்.

இதற்கு ஒரு விழாவே செய்கிறார்கள். இந்தத் திருவிழா பன்னிரண்டு நாட்கள் நடைபெறும். கோவிலில் காப்பு கட்டியதும் யாரும் பாயில் படுக்கமாட்டார்கள். செக்கு ஆட மாட்டார்கள். உலக்கை இடிக்கும் சத்தம் கேட்காது. அந்த அளவுக்கு மக்கள் மிக பயபக்தியோடு நடந்து கொள்வார்கள்.

நாடியம்மன்புரம் என்று இந்தக் கோவிலை அழைக்கிறார்கள். பட்டுக்கோட்டையை ஆண்ட அரசன் பட்டு மழவராயன் பட்டத்தாள் என்ற பெயரில் நாடியம்மையை வணங்கி வந்திருக்கிறான்.

ஆகவே இவள் பிரசித்தமானவள் என்பது புரிகிறது.

## கொப்புடைய நாயகி

இந்தக் கோயிலில் குடியிருப்பவள் துர்க்கை. இவளுக்குப் பெயர் கொப்புடைநாயகி. இவள் காரைக் குடியில் எழுந்தருளியிருக்கிறாள்.

ஒரு சிறு கதை.

முன்னூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு சிறுவன், ஒரு குட்டையிலிருந்து ஒரு விக்கிரகத்தைக் கண்டு எடுத்தான்.

அந்த விக்கிரகம் அம்பாள் விக்கிரகம். அந்த இடத்திலேயே ஒரு கோயில் கட்டினார்கள். மழைக்காலத்தில் தண்ணீர் தேங்குவதால் நகர்ப்புறத்தில் ஒரு கோயிலைக் கட்டி உத்ஸவ விக்கிரகத்தைக் கொண்டு விழா கொண்டாடுகிறார்கள்.

இந்தத் திருவிழா ஆரம்பமாகும் முன் செங்கத் தேட்டு என்ற ஒரு சடங்கு நடைபெறுகிறது.

குட்டையில் இரண்டு இடத்தில் பூசாரி குழி தோண்டி இரு பானைகளில் தண்ணீர் சேகரித்து மூலஸ்தானக் கோயிலில் பத்து நாட்கள் வைத்து இருப்பார். கற்பக் கிருகத்தில் இப்பானைகளை வைத்த உடனே மழை பெய்வது வழக்கம்.

ஆகவே மக்கள் சுகப் பிரசவத்திற்காகக் கொப்புடை நாயகியைப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

## அத்தியூர் திருக்கை காளிகாம்பாள்

விழுப்புரம் தாலூக்கா ஒதியத்தூரை அடுத்த அத்தியூர் திருக்கையில் ஓம குளத்தின் கரையில் ஒரு காளி கோயில் இருக்கிறது.

இது ஆதி காலக் கோயில். கோயிலின் உள்ளே பெரிய பலகைக் கல்லில் எருமைக்கிடாவின் தலையின் மேல் பத்துக் கரங்களும் ஆயுதங்களும் தாங்கிப் போர்க் கோலத்தில் நிற்கும் துர்க்கையின் உருவம் செதுக்கப்பட்டது.

ஆனால் இதைத் துர்க்கைக் கோயில் என்று கூறாமல், காளியாத்தாள் கோயில் என்றே அழைக்கிறார்கள்.

**அத்தியூர் குளக்கரையில் அமர்ந்தவளே மாகாளி!**
**சத்தியம் தவறாமல் சமைந்தவளே மாகாளி!**

இத்தரையில் வாழ்வதற்கு இசைந்தவளே மாகாளி!
தத்துவத்தின் மறுஉருவே தவமணியே மாகாளி!

என்று ஆரம்பித்து இருநூறு வரிகளில் சக்தி உபாசகர் தோத்திரப் பாடல்களைப் பாடி அவளைப் புகழ்ந்துள்ளார்.

அவள் குங்குமக்காரி என்று வழங்கப்படுகிறாள். கேட்டதைக் கொடுப்பவள். அவளுடைய சக்தியைப் புரிந்த சக்தி உபாசகர் தினசரிப் பாடிப்பாடி அழுது தொழுது அவள் அருளை வேண்டிப் பிரார்த்தித்து வந்தார். அவர் 'ஐந்து நாள் உண்ணாவிரதம்', 'ஏழு நாள் உண்ணாவிரதம்', 'ஒன்பது நாள் உண்ணாவிரதம்', என்றெல்லாம் இருப்பார்.

தண்ணீர் மட்டும் குடித்து விட்டு உபவாசம் இருப்பார். நாற்பத்தெட்டு நாளில் ஒரு வேளை சாப்பாடு சாப்பிட்டுவிட்டு ஒரு மண்டல காலம் உண்ணாவிரதம் இருப்பார்.

இப்படி அவர் அன்னையின் அருளைவேண்டிக் குடும்ப நலனை வேண்டிப் பாடிவந்தார்.

திடீர் என்று அவர் வேலை விஷயமாக வெளியூர் சென்று வேலையில் அமர்ந்தார்.

அவர் விரும்பிய எழுத்துப் பணி கிடைத்தது.

அதிலே முன்னேற்றம் அடைந்தார். சென்றவிடத்தும் தெய்வப் பணியில் ஈடுபட்டார். கருமாரியம்மன் கோவில், வேம்புலியம்மன் கோவில் போன்ற ஸ்தலங்களுக்குச் சென்று, பாடித் தொழுது வந்தார்.

ஒரு நாள்,

வெளியூரிலே இருந்த மனைவி பேரில் மருள் வந்து 'என் கோவிலில் வந்து, என்னைப் பாடி அழுது அழுது பரவசப்

படுத்திய பாலகன் இப்போது முன்னேற்றத்திலே அடி எடுத்து வைத்துவிட்டான். அவன் முன்னேற்றத்திற்கு நான் தான் காரணம். என் சன்னிதானத்திற்கு வரச் சொல். வந்து அவனைப் பாடச் சொல். பாடலைக் கேட்க ஆவலாக உள்ளது.' என்று சொல்லிற்று.

மனைவி கணவனுக்குக் கடிதம் எழுதினாள். சக்தி உபாசகர் மனைவி மக்களோடு அத்தியூர் காளி கோவிலுக்குச் சென்றார். அபிஷேக ஆராதனையைக் காளிகாம்பாளுக்குச் செய்து பொங்கலிட்டு அவர் இயற்றிய பாடல்களைப் பாடி ஆராதித்தார்.

அப்போது அவர் மனைவியின் மீது மருள் வந்து,

"எனக்கு மிகவும் சந்தோஷம். குறை ஒன்றும் இல்லை. மேலும் மேலும் முன்னேற்றத்தைக் கொடுக்கிறேன். அடுத்த முறை உங்கள் குலதெய்வமான அங்காள பரமேஸ்வரிக்குச் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டு, எனக்குப் பாவாடை கட்டிப் பொங்கலிட்டு மகிழுங்கள். நான் உங்களைக் கைவிடமாட்டேன்" என்றாள்.

அப்படிப்பட்ட அருள் வாய்ந்தவள் குங்குமக்காரியான காளிகாம்பாள் என்று பொருள்.

விழுப்புரத்திலிருந்து திருவண்ணாமலை போகும் சாலையில் ஒதியத்தூரில் இறங்கி மூன்று கிலோ மீட்டர் தூரம் வடக்கே நடந்து போனால் அத்தியூர்திருக்கை கிராமம் இருக்கிறது.

## வேண்டவராசியம்மன்

மக்கள் வேண்டும் வரங்களைக் கொடுப்பவள் ஆகவே 'வேண்டவராசியம்மன்' என்றுபெயர் பெற்று இருக்கிறாள். செங்கல்பட்டு மாவட்டம் நெல்லிக்குப்பம் கிராமத்தில் அன்னையின் கோயில் இருக்கிறது.

அன்னபூரணி போல அருளை வாரி வழங்குபவள் இவள். சப்த நாக கன்னியர்கள் இவளை வழிபட்டார்களாம். இவள் தலைக்கு மேலே ஏழுதலை நாகம் குடை பிடித்திருக்கிறது.

ஏழு சக்திகளும் ஒருங்கே இணைந்த மகாசக்தி இவள். ஆந்திராவில் கெண்டிக்கோட்டையில் ஏற்கனவே கோயில் கொண்டவள்.

முகமதியர்களால் கோயில்கள் சூரையாடப்பட்ட போது இந்த விக்கிரகத்தை ஒரு பெட்டியில் வைத்தார்கள். அந்த இடமே கோவிலாக மாறியது.

## சிவானந்தவல்லி

தென்னாற்காடு மாவட்டத்தில் திருக்கோவிலூர் என்ற ஒரு நகரம் இருக்கிறது. விழுப்புரத்தில் இருந்து திருவண்ணாமலை ரயில் மார்க்கத்தில் இருக்கும் ஊர் திருக்கோவிலூர்.

அந்த ஊரில் வினோதினி என்ற தென்பெண்ணையாறு ஓடுகிறது. அந்த ஆற்றங்கரையின் தெற்குப் பகுதியில் ஒரு சிவன்கோயில் இருக்கிறது.

சிவபெருமான் வீரம் விளைத்த எட்டு வீரட்டானங்களில் இதுவும் ஒன்று. அந்தகாசூரனை சம்கரித்த இடம் இது. சிவனின் பெயர் வீரட்டானேசுவரர். தேவி: பிரஹந்நாயகி என்கிற சிவானந்தவல்லி.

வீரட்டானேசுவரருக்குத் தனித் திருக்கோயில் மேற்கு நோக்கி இருக்கிறது.

சிவானந்தவல்லி தனிக்கோயில் கொண்டு இருக்கிறாள். இவளைப் பார்க்கும்போது, மயிலையில் கொலு வீற்றிருக்கும் கற்பகாம்பாளைப் போலவே இருப்பாள்.

கருணை பொழிவதில் அன்னபூரணியை மிஞ்சிடுவாள். இங்கு சிவனைவிட சக்திக்குப் புகழ் ஏராளம்.

ஒரு முறை ஒரு பக்தர் தினசரி பாடல் இயற்றி, அம்மன் சன்னதியில் பாடி வந்தார். அவர் நினைப்பதுபோல் எதுவுமே நடக்கவில்லை.

ஒரு நாள் உபவாசம் இருந்து சிவானந்தவல்லி மீது வசை பாட நினைத்து அதை அன்று இரவு திருக் கோயிலில் போய்ப் பாடினார்!

சாந்தசொரூபமுள்ள பிரகன்நாயகி கோபாவேசம் கொண்டாள். அந்தக் கோவிலில் எரிந்த விளக்கு அணைந்து எரிந்தது!

உடனே கோயில் சிப்பந்தி, "கொஞ்சம் வெளியில் வருகிறீர்களா, கதவைச் சாத்த வேண்டும்" என்றார். அந்தப் பக்தர் அழுத கண்களைத் துடைத்துக் கொண்டு வெளியே வந்து விட்டார்.

அன்று இரவு சுமார் மூன்று மணிக்குப் பக்தருக்கு ஒரு கனவு. அதே கோவில் அம்மனின் கருவறை. அம்மனின் விக்கிரகம் சாமந்திப்பூவால் அலங்காரம் செய்யப்பட்டு இருக்கிறது.

அதே அர்ச்சகர். இந்தப் பக்தர்தான் எழுதிய பாடல்கள் அடங்கிய நோட்டை அம்மனின் திருவடிகளில் வைத்திருக்கிறார்.

அர்ச்சகர் தீபாராதனை செய்கிறார். அம்மனின் பாவாடையில் இருந்த சாமந்திப் பூக்கள் பொல பொலவென்று பாட்டு நோட்டின் மீது உதிர்கின்றன. பக்தருக்கு மகிழ்ச்சி.

ஆனந்தக் கண்ணீர் சொரிந்தபடி நிற்கும்போது ஒரு பெண்ணின் முகம் பெரிதாகத் தெரிந்தது.

வட்ட முகம், மஞ்சள் பூசிய முகத்தில் குங்குமத்திலகம் இட்டுப் பக்தரை நோக்கி அவள் சிரிக்கிறாள். பக்தருக்கோ அதிர்ச்சி!

'யாரிந்தப் பெண்? இதுவரை பார்த்ததில்லையே! நம்மைப் பார்த்து ஏன் சிரிக்கிறாள்'? என்று நினைத்தார்.

கண் விழித்தார். இப்போது கண்டதெல்லாம் கனவு. உடனே எழுந்து கனவைப் பாட்டாக வடித்தார்.

அடுத்த ஒரு மாதத்தில் அந்தப் பக்தருடைய அண்ணன், தம்பியைப் பற்றிக் கவலைப்படாமலே இருந்தவர், திடீர் என்று திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார். திருமணம் நடந்தது. அடுத்த மூன்றாவது மாதத்தில் ஒரு நாள் தான் அவருக்குப் புரிந்தது. அன்னை பிருஹன்நாயகி அன்று கனவிலே காட்டிய முகம் இவள்தான் என்று தன் மனைவியின் முகத்தைப் பார்த்துப் புரிந்து கொண்டார்.

அவர் வசைபாடியதையும் மகிழ்ச்சியோடு ஏற்று அருள் பாலித்தவள் சிவானந்தவல்லி!

"அம்மம்மா யாருமில்லை அழுத கண்ணீர்
துடைத்திடவே
அம்மம்மா யாருமில்லை ஆறுதலைக் கூறிடவே!
அம்மம்மா அழுகின்றேனே அன்னை எனக்கில்லை
யம்மா
அம்மம்மா அனாதைநான் அழுதகுரல் கேட்கிலையோ?

என்று பாடியுள்ளார் அந்த பக்தர்.

## திருவாமாத்தூர் மாரியாத்தா

விழுப்புரம் தாலூக்காவில் பதினைந்து கிலோ மீட்டர் தூரத்தில் திருவாமாத்தூர் என்ற திருக்கோயில் இருக்கிறது. இது மாரியம்மன் கோயில்.

அந்தக் கோயில் மாரியம்மன் சரியான தீர்ப்பு வழங்குபவள் என்ற பெயர் பெற்றவள்.

அப்படிப்பட்ட மாரியம்மனை நாடினர் இருவர்.

அண்ணன் தம்பி இருவர். தம்பியை ஏமாற்றிப் பணத்தையெல்லாம் தங்கமாக்கி உருக்கி மூங்கில் கைத்தடியில் மறைத்து வைத்துக்கொண்ட அண்ணன், “இந்த மூங்கில் கழியைத் தவிர வேறு ஒன்றுமே என்னிடமில்லை” என்றானாம்!

தம்பி ஏமாந்து போனான். “அப்படியானால் திருவாமாத்தூர் கோயிலுக்கு வா. சத்தியம் செய்துவிடு. நான் நம்புகிறேன்” என்றான்.

இருவரும் திருவாமாத்தூருக்குப் போனார்கள். கோயில் கருவறைக்குச் சென்ற அண்ணன்,

“திருவாமாத்தூர் மாரியாத்தா! இந்த மூங்கில் தடியைத் தவிர வேறொண்ணுமே எங்கிட்ட இல்லை. சத்தியமாய்ச் சொல்றேன்” என சத்தியம் செய்து விட்டான்!

தம்பி அதை நம்பி விட்டான்.

பஞ்சாயத்துக்கு கூடவே வந்த ஊர் பெரிய மனிதர்களுடன் கோயிலை விட்டு வந்து ஊருக்குப் போய்க் கொண்டிருக்கும்போது, மூன்றாவது மைல் வந்ததும் அண்ணன், “ஏன்யா! நான் வீட்ல உங்ககிட்ட சொன்னதைத்தான் திருவாமாத்தூர் மாரியாத்தா கோயிலிலும் சொன்னேன். திருவாமாத்தூரா ரொம்ப சக்தி வாய்ந்தவள்னு சொன்னீங்களே! நான் பொய்ச் சத்தியந்தான் பண்ணேன். உங்க மாரியாத்தா துரத்தி வந்தா கொத்திட்டா?” என்றானாம்!

உடனே ‘ஆ’ என்ற அலறல்! அண்ணன் கீழே சாய்ந்தான். பாம்பு கடித்து விட்டது அவனை! “ஆ! பொய்

சத்தியம் பண்ணினதுக்கு மாரியாத்தா தக்க தண்டனை கொடுத்துட்டா!" என்று புலம்பினானாம். அவன் கையிலிருந்த மூங்கில் தடி கீழே கல்லிலே விழுந்து உடைந்தது.

என்ன ஆச்சர்யம்!

மூங்கில் தடியினுள் நீளமான கம்பிகளாகத் தங்கத்தை மறைத்து வைத்திருந்தான்! பஞ்சாயத்தார் அதைத் தம்பியிடம் கொடுத்தார்கள். திருவாமாத்தூர் மாரி அம்மன் உருவச்சிலையில், மார்பில், பாம்பின் வால் பகுதி தெரிகிறது! மூன்றாவது மைலில் பாம்பு கல்லிலேயே தெரிகிறது.

மாரியம்மன் அருள் பாலிப்பவள்.

## பச்சையம்மன்

ஸ்ரீமந்நாராயணன் பச்சை நிறம் பொருந்திய பச்சை ஆலிலையில் ஒரு பாலகனாகத் தவழ்ந்தார். அவர் முன் பச்சைப் பசேல் என்ற ஒரு ஜோதி, மண்ணையும் விண்ணையும் தொட்டு எழுந்தது!

உடனே அங்கே மரகத நிறம் போல அம்பிகை தோன்றினாள்.

ஓங்காரமே அவள் வடிவம்!

கண்ணே கருமணியே கவினழகுக்கருமாரி
கண்ணின் மணியே காவல் கொண்டமாரியே!
பெண்ணே! பேதாய்! பெருமை கொண்ட பேரரசி!
தண்ணேறுமையாளே! தாமரையின் நாயகியே!

ஓம் சக்தி உருவெடுத்தாய் ஓங்கார வடிவம் கொண்டாய்
ஓம் சக்தி மழலையானாய் ஒப்பற்ற இசையுமானாய்
ஓம்சக்தி சூழ்கடலூர் ஒளிந்திருந்த முத்துமானாய்
ஓம்சக்தி வானத்திலே மின்னலுடன் இடியுமானாய்

இப்படி ஆங்கார ஓங்கார வடிவமாக அம்பிகை எழுந்தாள். ஓங்காரமே ஒரு பசுமலை. அம்பிகையின் உருவமும் பச்சை. உள்ளமும் பசுமை. பட்டாடையும் அதே நிறம்.

கொஞ்சும் பச்சைக்கிளியுடன், பசுமையான வயல்களிடையே கோயில் கொண்டிருப்பவள் பச்சையம்மன் எனப் பெயர் பெற்றாள்.

"பச்சைநிறமான வேப்பமரத்தின் கீழே
ஆரோகணித்தவள்தானே அன்னை..?"

சென்னை மவுண்ட்ரோடு தர்க்காவுக்குப் பின்புறம் இருக்கிறது பச்சையம்மன் ஆலயம்.

## சென்னை சின்னக்கடை மாரியம்மன்

சென்னை பூக்கடை போலீஸ் ஸ்டேஷனை விடுத்து மேற்கே போனால், சின்னக்கடையம்மன் கோயில் இருக்கிறது.

அவள் அழகிய உருவம் கொண்டவள். பக்தர்களை வசீகரிக்கும் எழில் கொப்பளிக்கும் விக்கிரகம். எப்படிப்பட்டவர்களும் அங்கே வந்து சரணடைந்து விடுகிறார்கள். அப்படிப்பட்ட அன்னை மாரியம்மன் வியாபாரிகளை நிறைவு படுத்துகிறாள். அனைத்து மாந்தருக்குள் குறை போக்கிப் பிணி போக்கிப் பெரும் கருணைப் பேரருள் புரிகிறாள் அன்னை.

அந்தப் பக்கம் போகின்ற ஒவ்வொருவரும் அங்கே போய் கற்பூரம் கொளுத்திவிட்டுத்தான் வருவார்கள். அப்படிப்பட்ட அருள் முகம் அன்னைக்கு!

# பராசக்தியின் மறுபிம்பம்

பராசக்தி எல்லோருக்கும் பொதுவானவள். அன்னை அகிலத்து நாயகி. பரப்பிரம்மமே பரம்பொருள். பரம்பொருளே சக்தி. ஏக சக்தி. ஆக பராசக்தியே கருமாரியாகக் கொலு வீற்றிருக்கிறாள்.

மற்ற தேவதைகளைப் போல இல்லாமல் அபயகரம் காட்டும் அற்புத சக்தி படைத்தவள். திருவேற்காட்டிலே திவ்ய சொரூபமாய் அமர்ந்து அருள் பாலிக்கிற தேவி கருமாரி.

அவள் அருளைப் பெறுவோம்.



# இதர நூல்கள் !

இந்துப் பண்டிகைகளின் வரலாறும்
வழிபாட்டு முறைகளும் .... 9.50
சர்வதோஷ நிவர்த்தி தரும் சர்வேஸ்வரன்
சிவன், சங்கரன் வழிபாடு ... 11.00
எந்தக் காரியம் வெற்றி பெற எந்தக் கடவுளை
எப்படி வணங்க வேண்டும்? ..... 31.00
ஆன்மீக ஐயங்களும் விடைகளும் ................ 18.00
ஆனம ஞான இரகசியம் - ........................ 17.00

- B.A. பகவத்சிங் -

ஆன்மாவை தரிசியுங்கள் ..........................
பயன் மிகு ஹோமங்கள் ............................

## ⇒ பக்திமான்கள் - Spiritual People ⇐

மந்திர சாம்ராட் .................................. 65.00
(ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகளின் திவ்ய சரித்திரம்)
ஸ்ரீ சத்திய சாயிபாபா வரலாறும்
மகிமைகளும் .................. 26.00
ஆன்மிக ஐயங்களும் விடைகளும் ................
காஞ்சிப் பெரியவர்களின் வரலாறு ............. 11.00
ஸ்ரீ ராகவேந்திரரின் வரலாறும் மகத்துவமும் 15.50
அறுபத்துமூவரும் பன்னிரு ஆழ்வாரும் ......... 39.00
ஆன்மிகச் செல்வர்கள் வாழ்வில் நிகழ்ந்த
அற்புத நிகழ்ச்சிகள் ... 11.75
பக்த விஜயம் ........................................ 11.50
சுவாமி சின்மயானந்தரின் சிறப்புச் சிந்தனைகள் 39.00

## ⇒ யாத்திரை - Pilgrimage ⇐

காசிப் பயணத்தின்போது காண
வேண்டிய திருத்தலங்கள் ..... 11.00
திருமுருகன் திருத்தலங்கள் ......................... 30.00
வைணவத் திருப்பதிகள் ............................. 15.00
தமிழக இந்துக் கோயில்கள் - பாகம் 1 ......... 27.00
பாகம் 2 .......... 13.00
திருத்தலங்களைத் தரிசிக்க வாரீர்! .............. 22.00
திருப்பதி செல்கிறவர்களுக்கான தெளிவான
வழிகாட்டி ..... 15.00

## ⇒ பக்திப் பாடல்கள் - Devotional Songs ⇐

அன்றாடம் இந்துக் கடவுள்களை
வழிபட உதவும் பாடல்கள் ..... 15.00
நினைத்தது நிறைவேற உதவும் இறையருட்
பாடல்கள் ..... 50.00
துன்பம் தீர்க்கும் துதிப் பாடல்கள் .............. 22.00
பக்தி பஜனைப் பாடல்கள் ......................... 33.00
கல்ப பூஜை அர்ச்சனைகள் ......................... 20.00
அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் மாலை .. 11.50
ஆதிசங்கரர் அருளிய சுப்ரமண்ய புஜங்கம் .... 6.00
தாயுமானவர் பாடல்கள் ........................... 15.00
இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பா ........ 31.00
திருமுறை திவ்யப் பிரபந்தத் திரட்டு ............ 9.50
ஸ்தோத்திரக் களஞ்சியம் ........................... 14.50
திருப்பாவை, திருவெம்பாவை - மூலமும்
தெளிவுரையும் ..... 10.00

# விற்பனையாகும் இதர நூல்கள்!

⇒ இசைக் கலைஞர்கள் - Musicians ⇐

உலகப் புகழ்பெற்ற பாப் பாடகர்கள் ........... 21.50
தென்னிந்திய இசைக் கலைஞர்கள் ............... 15.00
இசைஞானி இளையராஜா ........................ 18.00
சங்கீத சாகரம் யேசுதாஸ் ....................... 15.00

⇒ இசைக் கருவிகள் - Musical Instruments ⇐

நாகஸ்வரம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் .. 16.00
தவில் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் .......... 15.00
கடம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ........... 18.00
மிருதங்கம் மற்றும் கஞ்சிரா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் .... 78.00
புல்லாங்குழல் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 45.00
(தமிழக அரசின் 5,000 ரூபாய் பரிசு பெற்ற நூல்)
வீணை வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ....... 45.00
வயலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ....... 38.00
ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் ... 45.00
புல்புல்தாரா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் . 15.00
கிடார் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ......... 58.00
தபேலா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ....... 22.00
மாண்டலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் . 25.00
கீ போர்டு வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ... 28.00
ஜலதரங்கம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் ..
நடன முத்திரைகள் ................................ 22.00
நடன அடைவுகள் ................................ 60.00

⇒ மதம் - Religion ⇐

மதமும் மன அமைதியும் ........................... 19.50
இந்துமத வேதங்களுக்கு எளிமை விளக்கங்கள் 13.25
இந்துமத விரதங்களும் அவற்றின் பலன்களும் 13.00
சைவ சமயம் ........................................ 9.00
புத்தபிரானின் வாழ்வும் வாக்கும்................ 7.50
பைபிள் கதைகள் ................................. 9.50
புத்த, ஜைனக் கதைகள்............................ 7.00
கிறிஸ்தவ மதம் காட்டும் நன்னெறிகள்.......... 12.00
பகவத் கீதை, திருக்குர் ஆன், புனித பைபிள் என்ன சொல்கின்றன? ... 20.00
ஈடு இணையற்ற இந்து மதம்........................ 22.00

⇒ இஸ்லாமிய விஷயங்கள் - ⇐

முஸ்லீம்களுக்கான சட்டம்......................... 18.90
இஸ்லாமியக் காதல் கதைகள் ...................... 21.00
மறையாத காவியமொன்று (கவிதைகள்) ...... 37.50
முஸ்லிம் டைஜஸ்ட் (உலகளாவிய தகவல் மஞ்சரி) 24.00
பேனா முனையில் அரை நூற்றாண்டு ......... 26.00
(திருச்சி குலாம் ரசூலின் வாழ்க்கை வரலாறு)
என்னைக் கேளுங்கோ! ............................ 15.00
(திருச்சி குலாம் ரசூலின் பரபரப்பான கேள்வி-பதில்கள்)
உமர்கயாம் கலீல் கிப்ரானின் கவிதை நயங்கள் 13.00
என்னைக் கவர்ந்த இனிய தலைவர் சிராஜுல் மில்லத் .......... 40.00

